# போட்டியிட்டு பெறத்தக்க புதுசுவை!



நீங்கள் பிஞ்சுள்ளம் படைத்த சிசுவாக இருந்தாலும், துடிப்புடன் விளங்கும் டீனேஜராக இருந்தாலும், தண்டு பிடிக்கும் தொண்டு கிழவராயிருப்பினும், இன்றே ஆம்ப்ரோவை சுவைத்துப் பாருங்கள்!




**அம்ப்ரோ**®

**க்ளூகோஸ் பிஸ்கட்**




aa/afp/6676

# அம்புலிமாமா/பல்சாரா ஓடோமாஸ் வண்ணந்தீட்டும் போட்டி

**வெற்றிபெற 50 பரிசுகள்!**
இரண்டு முதல் பரிசுகள்:
ஒவ்வொன்றும் ரூ. 25
மூன்று இரண்டாவது பரிசுகள்:
ஒவ்வொன்றும் ரூ. 10
இருபது மூன்ருவது பரிசுகள்:
ஒவ்வொன்றும் ரூ. 5
இத்துடன் 25 தகுதிச் சான்றிதழ்கள்






மேற்காணும் படத்திற்கு வண்ணம் தீட்டுங்கள். பிறகு
CHANDAMAMA/BALSARA'S-ODOMOS COLOURING CONTEST, POST BOX NO. 6121, BOMBAY 400 005.
என்ற விலாசத்திற்கு உங்களது நுழைவுத்தாளை அனுப்புங்கள். ஒவ்வொரு நுழைவுத் தாளுடனும் பல்ஸாராவின் ஓடோமோஸ் கார்ட்டனிலிருந்து மேல் அட்டையை இணைத்து அனுப்ப வேண்டும். நினைவிருக்கட்டும், 16 வயது வரையுள்ள குழந்தைகள் மட்டுமே கலந்து கொள்ளலாம். முடிவுகள் இறுதியானவை. இது சம்பந்தமான எந்த கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்பட மாட்டாது.

இந்த அட்டையை அனுப்புக




Name :________________ Age :________

Address :________________________

1977 மார்ச் 31ந்தேதிக்கு முன் நுழைவுத்தாள்களை அனுப்புக.
மேலே உள்ள விவரங்களை ஆங்கிலத்தில் நிரப்புக.
உங்களுக்குப் பிடித்தமான நிறத்தில் வண்ணந்தீட்டலாம்.

CUT ALONG DOTTED LINE

**பல்ஸாராவின் ஓடோமோஸ் கொசு விரட்டி**

CHAITRA-BLS-141 TAM

# மங்கை

**மாதமிருமுறை வரும்**
**மாதர்குலப் பத்திரிகை**

பெண் குலம் படித்துப் பயன் படத்தக்க வகையில் வெளிவரும் ஒரே பத்திரிகை.

சமையல் கலை-தையல்கலை-அழகுக் குறிப்புகள்-உடற் பயிற்சி-மருத்துவ ஆலோசனை-வாழ்க்கைக்கு வழிகாட்ட உதவும் பெண்களின் வரலாறு-ஆடல், பாடல் மற்றும் விளையாட்டு போன்ற பல கலைகளையும் பற்றிய கட்டுரைகள்.

கருத்தைக் கவரும் கதைகள், உயிரோட்டமுள்ள படங்கள் இன்னும் பல அம்சங்கள் கொண்டது.

இல்லத்துக்கு ஏற்ற இலக்கியப் பத்திரிகை.

**மங்கை**
டால்டன் ஏஜன்சீஸ்
**வடபழனி-சென்னை-26**

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

அறவழியில் அதாவது நேர்மையாக நடத்தப்படும் இல்வாழ்க்கையே சிறந்தது. இது பிறர் குற்றம் குறை சொல்லாமல் அமையும். அப்போது தான் இது மேலும் மெருகு பெற்று பொலிவுடன் விளங்கும். இதனையே வள்ளுவரும்,

"அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன் பழிப்பது இல்லாயின் நன்று"

எனக் கூறினர். பிறர் குற்றங்குறைகளை எடுத்துக் கூறாமல் இருக்கும் ஒருவனது இல்வாழ்க்கையே மிகவும் உயர்ந்தது. அத்தகைய நேர்மையான நல்ல வாழ்க்கையே மனநிறைவைத் தரும். பிறரது பாராட்டுகளையும் பெறும். இவ்வாறு வள்ளுவர் கூறியதை நாம் கருத்தில் கொண்டு நம் வாழ்க்கையை நடத்தி வருவோமாக

மதிமுகம்: 60 மார்ச் '77 புன்னகை: 3

தனிப் பிரதி ரூ. 1-25 வருட சந்தா ரூ. 15-00









*த்யாஜ்யம் நதைர்யம் விதுரேபி காலே*
*தைர்யாத் கதாசித் கதிம் ஆப்னயாத்ஸஹ*
*யதா சமுத்ரேபிச பாதபங்கே*
*சாம் யாத்ரிகோ வாஞ்சதி தர்த்துமேவ*

[கஷ்டம் வந்த காலத்திலும் தைரியத்தை இழக்கக் கூடாது. தைரியம் இருந்தால் எதனையும் சமாளிக்கும் வழியைக் காண முடியும். நடுக் கடலில் கப்பல் மூழ்கி விட்டால் அதில் பயணம் செய்பவன் உயிர்தப்ப முயல்கிறானல்லவா.]

*வ்யஸனே மித்ரபரீக்ஷா*
*சூரபரீக்ஷா ரணாங்கனே பவதி*
*வினயே ப்ருத்ய பரீக்ஷா*
*தான பரீக்ஷாச துர்பிக்ஷே.*

[கஷ்டகாலத்தில் தான் நண்பன் பரீக்ஷிக்கப் பட முடியும். அது போல போர் களத்தில் வீரர்களும், பணிவில் வேலையாட்களும் பஞ்சகாலத்தில் கொடையாளியும் பரீக்ஷிக்கப்படுகிறார்கள்.]

*ந சதஸ்வாஹ கக்ஷாகாதம்*
*ந சிம்ஹா கனகர்ஜிதம்*
*பரைரங்குலி நிர்திஷ்டம்*
*ந சஹந்தே மனஸ்விநஹ*

[நல்ல குதிரைக்கு சாட்டை அடி விழாது. சிங்கம் இடி இடிப்பதை சகிக்காது. தன்மானம் உள்ளவன் பிறர் ஆட்டி வைக்கிறபடி நடக்கமாட்டான்.]



# மித்திரலாபம்

குளக்கரையில் நான்கு நண்பர்களும் சுகமாகக் காலம் கழித்தனர். இப்படி இருக்கையில் ஒரு நாள் திடீரென சித்திராங்கன் காணப்படவில்லை. மானைக் காணாத மற்ற மூவரும் ''நம் சித்திராங்கனை ஏதாவது சிங்கம் கொன்றுவிட்டதா? அல்லது யாராவது வேடன் வைத்த கண்ணியில் அகப்பட்டுக் கொண்டுவிட்டதா? அல்லது காட்டுற்குள் போய் வழி தெரியாமல் திண்டாடுகிறதா? அவனைப் பற்றிய ஒரு தகவலும் தெரியவில்லையே. நம்மில் ஒருவர் சென்று தேட வேண்டும். ஆமையும் எலியும் போனால் காலதாமதமே ஆகும் எனவே காகம் தான் போகவேண்டும்'' என்று பலவிதமாகக் கூறி யோசிக்கலாயின.

அப்போது ஆமை காகத்திடம் ''நீ பறந்து போய் சித்திராங்கன் எங்காவது இருக்கிறானா என்று பார்த்து வா'' என்றது. இலகுபதனனும் பறந்துபோய் ஒரு குளக்கரையில் ஒரு வேடன் வைத்த கண்ணியில் சித்திராங்கன் அகப்பட்டிருப்பதைக் கண்டது. உடனே அதனிடம் அது போய் ''எப்படி இதில் அகப்பட்டுக் கொண்டாய்?'' என்று கேட்டது.

மானும் ''என் விதி. மாட்டிக் கொண்டு விட்டேன் இனி நான் உயிர் தப்பமுடியாது. ஆனால் இப்போது என் நண்பனான உன்னைப் பார்த்ததே போதும். மனநிறைவு ஏற்பட்டுவிட்டது. இனி நிம்மதியாக இறக்கலாம். நான் ஏதாவது தப்பிதமாகப் பேசி இருந்தால் என்னை மன்னித்துவிடு. நம் மற்ற நண்பர்களான இரணியகனிடமும் மந்தாரகனிடமும் இவ்வாறே மன்னிப்பை வேண்டிய



தாகக்கூறு'' என்று கூறியது. காகமும் ''சித்திராங்கா, கவலைப்படாதே. நண்பர்களான நாங்கள் இருக்கும்போது நீ ஏன் கவலைப்படுகிறாய்? இதோ ஒரு நொடியில் இரணியகனை அழைத்து வருகிறேன். அவன் இந்தக் கண்ணியை அறுத்து உன்னை விடுவிப்பான்'' எனக் கூறி விட்டு தன் நண்பர்களைக் காண வந்தது.

நண்பர்களிடம் காகம் விஷயத்தைக் கூறி இரணியகனைத் தன் முதுகின் மீது ஏற்றிக்கொண்டு பறந்து சித்திராங்கன் உள்ள இடத்திற்கு வந்தது. மானும் ''ஆகா. நண்பர்கள் என்றால் உங்களைப் போலத்தான் இருக்க வேண்டும்'' என ஆனந்தக் கண்ணீர் வடித்தது.

அப்போது காகம் ''நீ ஜாக்கிரதையாக இருந்திருந்தால் இப்படிக் கண்ணியில் அகப்பட்டிருக்க வேண்டாமே'' என்றது. சித்திராங்கனும் ''என்ன எச்சரிக்கையாக இருந்தாலும் நாம் சில சமயங்களில் இப்படி ஆபத்தில் அகப்பட்டுவிடுவோம். நான் இது மாதிரி இரண்டு மூன்று தடவைகளில் அகப்பட்டுத் தப்பி இருக்கிறேன்'' என்று கூறியது.

காகமும் எலியும் அதன் அனுபவம் ஒன்றைக் கூறும்படி வேண்டின. மானும் ''இப்போது வேண்டாம். வேடன் எந்த சமயத்திலும் வரலாம். அதனால் இரணியகன் இந்தக் கண்ணியை அறுக்கும் வேலையில் ஈடுபடட்டும். நானும் விடுதலை பெறுவேன். வேடன் வருவதற்குள் நாம் மூவரும் போய் விடலாம். போகும் போது என் மற்ற அனுபவங்களைப் பற்றிக் கூறுகிறேன்'' என்றது

இரணியகனும் ''நான் ஒரு நொடியில் இந்த வேலையைச் செய்து முடித்து விடுவேன். நீ கவலைப்படாதே. உன் அனுபவத்தைக் கூறு'' எனவே மானும் சொல்லலாயிற்று.

''விதி தன் வழியே செல்லும். அதைத் தடுக்க யாராலும் முடி

யாது. வெகுகாலத்திற்கு முன் நான் ஆறுமாதக் குட்டியாக இருக்கையில் எங்கள் மந்தைக்கு முன் ஓடி ஓடிப் போவேன். ஏதாவது தடை இருந்தால் துள்ளிக் குதித்து ஓடுவேன். ஒரு நாள் வழியில் ஒரு வேடன் வலை விரித்து வைத்திருந்தான். மற்ற மான்களெல்லாம் ஒரே தாண்டில் குதித்து அதில் அகப்படாமல் போயின. ஆனால் நானோ அதில் அகப்பட்டுக் கொண்டுவிட்டேன். வேடன் என்னைப் பிடித்து என் கால்களைக் கட்டிவிட்டான். மற்ற மான்களோ பயந்து ஓடிவிட்டன.

வேடன் என் அழகைக் கண்டு என்னைக் கொல்லாமல் ஒரு அரசனுக்கு விற்றுவிட்டான். அரசனும் என்னை நன்கு கவனித்து வளர்க்கலானான். அந்தப்புரப் பெண்கள் என் அழகைக் கண்டு மகிழ்ந்து என்னைச் சுற்றிச் சுற்றி வந்து நன்கு கவனித்துக் கொண்டார்கள். இதற்குள் மழைக் காலம் வந்தது. இடியும் மின்னலும் மழையுமாக இருப்பது கண்டு எனக்குக் காட்டின் நினைவே வந்தது. என் உறவினர்களையும் கூட்டத்தவரையும் எப்போது சந்திப்பது என எண்ணிக் கண்ணீர் வடிக்கலானேன். என் நிலையைக் கண்டு எனக்கு ஏதோ பேய் பிடித்து விட்டது என அரசன் எண்ணி மந்திரம் போட பூசாரியை அழைத்து வந்தான். அவன் என்னைத் தடியால் அடிக்கலானான். அப்போது அங்கு வந்த ஒரு சன்னியாசி "எதற்காக அந்த மானை அப்படி அடிக்கிறீர்கள்? அது செய்த தவறு என்ன?" என்று கேட்டார்.

என்னைப் பற்றிய விவரங்களை அவரிடம் கூறினார்கள். சன்னியாசியோ "இது சுதந்திரமாகத் திரிய விரும்புகிறது. எனவே இதனை விட்டு விடுங்கள்" என்றார். அரசனும் உடனே என் காயங்களுக்கு மருந்து போட்டு என்னை விட்டு விட்டான்.



# முதல் கிருஸ்துவ சக்கரவர்த்தி

நீரோ போன்ற ரோமானியசக்கரவர்த்திகள் கிருஸ்துவர்களை சிங்கங்களின் முன் விட்டு சாகடித்த போதிலும் கான்ஸ்டன்டைன் என்ற ரோமனிய சக்கரவர்த்தி கிருஸ்துவமதத்தை தன் நாட்டில் நிலை நாட்டினான். இவனது உருவச் சிலை பாது காத்து வைக்கப்பட்டுள்ளது. படத்தில் அதன் தலைப் பகுதியையும் மற்ற பகுதி களையும் காணலாம்.





# மர்மக் கடாகம்

## 14

[நீர் வீழ்ச்சியிலிருந்து கீழே வீழ்ந்த வெற்றிவேலனும் கோணங்கியும் உயிர் தப்பினர். அவர்கள் குள்ளர் குல சேனாதிபதியை உயிர் தப்ப வைத்து குள்ளர் குல ராணியைக் கண்டனர். அவள் தன் எதிரிகளைப் பற்றி வெற்றிவேலனிடம் கூறிக் கொண்டிருக்கும் போதே மலைப் பாறை மீது நின்ற பயங்கர மனிதக் குரங்கு அவர்களின் மீது ஒரு பாராங் கல்லை விட்டெறிந்தது. அப்போது]

வெற்றிவேலனும் கோணங்கியும் மலைப் பாறையையே பார்க்கலானார்கள். வெற்றிவேலன் அந்த பயங்கர மனிதக் குரங்கைப் பிடித்து கொண்டு நிற்கும் மனிதனை நன்கு பார்க்கலானான். இதே சமயம் அவனருகே அந்த பயங்கர மிருகம் விட்டெறிந்த பாறாங்கல் வந்து விழுந்தது. குள்ளர் கூட்டம் பயப்படலாயிற்று. சட்டெனத் தாம் ஏறியிருந்த ஆட்டுக் கடாக்களை சற்று தூரத்திற்கு ஓட்டிக் கொண்டு போய் நின்றனர். குள்ளர் குல ராணியும் வேலனிடம்''இந்த பயங்கர மிருகமும் அந்த மாபெரும் மனிதனும் எங்களை பத்துப் பனிரெண்டு நாட்களாகத் துன்புறுத்தி வருகிறார்கள். காட்டிற்குள் வேட்டையாடப் போன எம் ஆட்கள் நால்



வரை அந்த மனிதன் கொன்று விட்டான். அவர்கள் எந்த நிமிடத்திலும் எங்களைத் தாக்க வரலாம்'' என்ருள்.

வெற்றிவேலனும் அந்த இராணியின் நிலைக்கும் அந்தக் குள்ளர் குலம் படும் அவஸ்தைக்கும் இரக்கம் கொண்டான். அவன் உடனே தொலைவிலுள்ள மனிதனை உற்றுப் பார்க்கலானுன். கோணங்கியும் ''வேலா, அந்த மனிதனை நாம் எங்காவது பார்த்திருக்கிருேமா?'' என்று கேட்டான்.

வேலனும் ''ஆமாம். இவன் என் நாட்டில் ஒரு படைத்தளபதியாக இருந்தவன். இவன் பெயர் கடா வெட்டி. இவன் ஊரை விட்டு வந்து இந்தக் காட்டில் இப்படி ஒரு மனிதக் குரங்கைப் பிடித்து வைத்து கொண்டு இவர்களையெல்லாம் பயமுறுத்தி வருகிருனே'' என்ருன்.

கோணங்கி அப்போது ''வேலா, ஜாக்கிரதை. அதோ அவன் அந்தக் குரங்கின் முதுகில் தன் வாளால் குத்துகிருன். அந்தக் குரங்கு அதோ இன்னெரு பாருங் கல்லைத் தூக்க முயல்கிறது'' என்ருன்.

வேலனும் ''ஆமாம். அந்த மனிதன் மீண்டும் நம் மீது பாருங் கல்லை விட்டெறிய முயல்கிருன். ஆனுல் பார். பாவம். அந்தக் குரங்கால் அதனைத் தூக்க முடியவில்லை. எவ்வளவு சிரமப்படுகிறது!'' என்ருன்.

கொஞ்ச நேரம்வரை அந்த இரண்டு பேர்களும் அந்த மலைப் பாறையையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். மனிதக் குரங்கு ஒரு மனிதனிடம் அகப்பட்டுக் கொண்டு படாத பாடுபடுவதையும் அவர்கள் பார்த்தார்கள்.

கோணங்கியும் ''இப்போது மட்டும் ஒரு வில்லும் அம்பும் கிடைத்தால் அந்தக் குரங்கை ஒரே அம்பால் அடித்துக் கொல்லலாம்'' என்ருன். அப்போது வெற்றிவேலன் குள்ளர் குல ராணியிடம் ''இங்கே யாரிடமாவது

வில்லும் அம்புகளும் இருக்கின்றனவா?'' என்று கேட்டான்.

அப்போது ராணி குள்ளர் குலப் படைத்தலைவனைப் பார்த்தாள். அவனும் ''ஆமாம். ஒரு பெரிய வில்லும் நாலைந்து அம்புகளும் காட்டில் கிடந்து எனக்குக் கிடைத்தன. அவற்றை நான் பத்திரமாக எடுத்து வைத்திருக்கிறேன். நாங்கள் இந்த மாதிரி வில் அம்புகளையெல்லாம் உபயோகிப்பதில்லை'' என்றான்.

ராணியும் ''என்னிடம் இதைப் பற்றி சொல்லவில்லையே. சரி சரி போய் உடனே எடுத்து வந்து இவர்களிடம் கொடு'' என்றாள். உடனே குள்ளர் குலப் படைத்தலைவனும் தன் வீட்டை நோக்கிச் சென்றான்.

வேலனும் ராணியிடம் ''பரவா இல்லை. உங்கள் சேனாதிபதி முன் யோசனையுடன்தான் நடக்கிறார். இந்த வில் அம்புகளை எப்போதோ எடுத்து வைத்தது இப்போது எவ்வளவு உபயோகமாக இருக்கிறது'' என்றான்.

ராணியும் ''இப்போது எனக்கு உள்ள பயமெல்லாம் அந்த பயங்கர மிருகத்தைப் பற்றித்தான். அது ஒழிந்தால் போதும். அதைக் கண்டாலே எங்கள் கூட்டம் நடு நடுங்குகிறது எனவே அதனை ஒழிக்க ஒரு வழியைப் பாருங்கள்''



என்று கூறிக் கொண்டிருந்தாள். இதே சமயம் மனிதக் குரங்கு மிகவும் சிரமப்பட்டு அந்தப் பாறுங்கல்லைத் தூக்கி விட்டது. ஆனால் எறிய முடியவில்லை. அது கண்டு அதன் அருகே நின்ற மனிதன் கோபம் கொண்டு தன் வாளின் முனையால் அதனைக் குத்தலானான்.

ஏனோ திடீரென அந்த மனித குரங்கு அவனுக்குக் கட்டுப்படவில்லை. தன் கையிலிருந்த பாறுங்கல்லை தன்னை ஆட்டி வைப்பவன் மீதே எறியக் குறிவைத்தது.

இதே சமயம் குள்ளர் குல ராணி ''இதோ வந்து விட்டான். என் சேனாதிபதி. அதோ, வில்லும்



அம்புகளும். வாங்கிக் கொள்ளுங்கள் இப்போதே ஒரு அம்பை விட்டு அந்த பயங்கர மிருகத்தைக் கொன்று தள்ளுங்கள்'' என்று படபடவென்று பொரிந்து தள்ளினுள். சேனுதிபதியும் வில்லையும் அம்புகளையும் வேலனிடம் கொண்டு வந்து கொடுத்தான். பிறகு சுற்றிலும் பார்த்து விட்டு ''ஆகா! இது தான் சரியான சமயம். நீங்கள் அம்பை எய்து அந்த பயங்கர மிருகத்தைக் கொன்று விடுங்கள். நாங்கள் எங்கள் படையோடு போய் அந்த மனிதனைத் துரத்தித் துரத்தி தாக்குகிருேம்'' என்ருன். அப்போது வெற்றிவேலன் கோணங்கியிடம் ''இவர்கள் கூறுவதைக் கேட்டாயா; இவ்வளவு தூரத்திலிருந்து குறி வைத்து அம்பால் அடிக்க முடியுமா? அப்படி அந்த மிருகம் அடிபட்டாலும் இறந்து விடும் என்பது என்ன நிச்சயம்? மேலும் இவர்கள் சிறந்த வீரர்களா என்பதும் தெரியாது'' என்ருன்.

கோணங்கியும் ''அதெல்லாம் கிடக்கட்டும். இவர்களெல்லாம் அந்த மனிதக் குரங்கைப் பார்த்தாலே நடுநடுங்குகிருர்கள். முதலில் அவர்களது மனதில் ஏற்பட்டுள்ள பயத்தை ஒழிக்க வேண்டும். அதனுல் அம்பால் அந்த மனிதக் குரங்கை அடிப்பதே மேல்'' என்ருன்.

குள்ளர் குல ராணியும் படைத்தலைவனும் ''தாமதிக்காதீர்கள். அம்பை விடுங்கள். இப்போது அந்த மிருகத்தின் கவனம் நம் மீது இல்லை. தன்னை ஆட்டி வைப்பவன் மீதே இருக்கிறது. இது தான் சரியான தருணம். இதை விட்டு விட்டால் மறுபடியும் இது போன்ற வாய்ப்பு கிடைக்குமோ என்னமோ? நீங்கள் அதனை அடித்ததும் நாங்கள் எங்கள் வீரர்களுடன் போய் எதிரிகளைத் தாக்குவோம்'' என்றனர். அவர்கள் கூறியது போல அந்த மனிதக் குரங்கும் பாறுங்கல்லை தன்னை

ஆட்டி வைப்பவனின் மீது போட முயன்றது. இதே சமயம் பலர் 'ஆ' 'ஊ' என்று கூச்சல் போட்டு அந்தக் குரங்கை மிரட்டினூர்கள். குரங்கோ அப்படியும் இப்படியுமாக ஆடலாயிற்று.

அப்போது அங்கு வந்த குள்ளர்கள் கயிறுகளை வீசி அந்தக் குரங்கின் கால்களையும் கைகளையும் கட்டிப் போட்டனர். அதற்குள் அந்தக் குரங்கு தான் தூக்கி வைத்துக் கொண்டிருந்த கல்லைக் கீழே விட்டெறிந்தது.

அப்போது அதனருகே நின்ற மனிதன் தன் வாளால் அக் குரங்கை அடித்தான். அதனருகே நின்ற குள்ளர்கள் அதன் கட்டுகளை மேலும் பலமாக இருக்கும் படியாகச் செய்ய முயன்றூர்கள் அப்போது குள்ளர் குலப் படைதலைவன் ''ஆ! இது தான் சரியான சமயம். அடியுங்கள் அந்தக் குரங்கை'' என்றூன். அப்போது வெற்றிவேலன் ''இவ்வளவு தூரத்திலிருந்து அம்பு எய்து அந்த மனிதக் குரங்கைக் கொல்ல முடியாது. ஒரு வேளை நாம் எய்யும் அம்பு அதன் மீது படா விட்டால் நீங்கள் போடுகிற திட்டம் நிறைவேறுமா? உன் எதிரிகளை எதிர்ப்பதோடு அந்த மனிதக் குரங்கையும் எதிர்க்க வேண்டிவரும். உன் வீரர்களால் அதனை எதிர்க்க முடியுமா?'' எனக் கேட்டான்.

அது கேட்டு படைத்தலைவன் ''நீங்கள் மட்டும் அந்த பயங்கரப்






பிராணியைக் கொன்று விட்டால் போதும். அதற்கு இது தான் சரி யான தருணம்'' என்று கூறினான்.

வெற்றிவேலனும் "உன் இஷ்டப் படியே நான் செய்கிறேன். ஆனால் தூரம் இன்னும் கொஞ்சம் குறை வாக இருந்தால் அந்த மனிதக் குரங்கையும் அந்த மனிதனையும் நிச்சயமாகக் கொன்று விட முடி யும். இப்போது கொஞ்சம் சந் தேகமே'' என்றான்.

படைத்தலைவனோ ''நீங்கள் அம்பை எய்து பாருங்கள். கண் டிப்பாக அந்த பயங்கர மிருகம் அம்பால் அடிபட்டுக் கீழே விழுந்து விடும். பிறகு நாங்கள் அந்தக் குள்ளர் கூட்டத்தை ஒரு 'கை' பார்த்து விடுகிறோம்'' என்றான். வெற்றிவேலனும் ''சரி, சற்று உயரமான இடத்தில் நின்று கொண்டு அம்பை எய்கிறேன். அந்த மனிதன் யாரென்றும் எனக் குத் தெரியும். அவன் யாரால் தாக்கப் பட்டான் என்பதை அறிந்து கொள்ளவும் வேண்டும். அவனை நான் அறிவேன்'' எனக் கூறினான்.

பிறகு அவன் சற்று உயரமான இடத்தில் போய் நின்று கொண்டு "அடே, கடா வெட்டி, நான் தான் வெற்றிவேலன். உன்னை ஒழிக்க வந்திருக்கிறேன்'' என்று பலமாகக் கத்தினான்.

ஆனால் அவன் அப்படிக் கத்திக் கூறியதை கடா வெட்டி கேட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை. அவனும் அவனோடு இருந்த குள் ளர்களும் அந்த மனிதக் குரங் கைக் கட்டி போடுவதில் முனைந் திருந்தார்கள்.

அப்போது கோணங்கி வெற்றி வேலன் இருக்கும் இடத்திற்கு வந்தான். அவன் வேலனிடம் ''இந்த ராணியின் எதிரியும் அந் தப் மலைப்பாறை மீது இருக் கிறானும். அதோ கழுகு இறகு களாலான தலைப்பாகையை அணிந்து நிற்கிறானே. அவன் தான் இவர்களது எதிரியாம். அங்குள்ள குள்ளர் கூட்டத் தலை

வனுக இருப்பவன்'' என்ருன். வெற்றிவேலன் மீண்டும் ஒரு முறை மலைப்பாறை மீது நின்றவர்களை நன்கு பார்த்தான். இதே சமயம் குள்ளர்குல ராணி தன் படைகளை அந்தப் பாறையை நோக்கிச் செலுத்துவதற்கான ஆயத்தங்களைச் செய்யலாஞள்.

அப்போது வெற்றிவேலன் குள்ளர்குல ராணியிடம் ''ராணியே அங்குள்ளவர்கள் போருக்குத் தயாராகவே இருக்கிருர்கள். நான் இப்போது அம்பை எய்தால் அவர்கள் உன் ஆட்களைத் தாக்க வந்து விடுவார்கள். அந்தத் தாக்குதலை எதிர்த்து முறியடிக்க முடியுமா? இதனையெல்லாம் யோசித்துப் பார். அதற்குப் பிறகு நான் அம்பை எய்கிறேன்'' என்ருன்.

வெற்றிவேலன் திரும்பத் திரும்ப எதிரிகளைத் தாக்க முடியுமா என்று கேட்டதும் குள்ளர் குல ராணிக்கும் அது பற்றிய கவலை ஏற்பட்டது. இரண்டொரு நிமிடங்கள் அவள் அது பற்றி யோசித்தாள்.

குள்ளர்குல ராணி தன் படைத் தலைவனைப் பார்த்து ''நீ என்ன சொல்கிருய்?'' என்று கேட்டாள் குள்ளர் படைத்தலைவனும் "இவர் அம்பை எய்யட்டும். அந்தக் குள்ளர்களும் நம்மைப் போலவே அம்பு எய்வதை பார்த்திராதவர்கள். ஒரு அம்பு பட்டு பயங்கர மிருகமோ அல்லது ஒரு மனிதனே



எப்படித் துடி துடித்துச் சாகிருன் என்பதை அவர்கள் கண் முன் காணட்டும். நமக்கும் உதவி செய்ய சக்திவாய்ந்த ஒருவர் வந் திருக்கிருர் என்பது அவர்களுக் குத் தெரிய வரும். அதனுல் அவர் களது உற்சாகம் குறைந்து விடும். நாமும் தீவிரமாகத் தாக்குதலே ஆரம்பிப்போம். அப்போது அவர் கள் நம் சக்தியைக் கண்டு நடுங்கி ஓடுவார்கள் அப்படி ஓடுபவர்களே நாங்கள் துரத்தி முறியடிக் கிருேம்'' என்ருன்.

வெற்றிவேலனும் ''நீங்கள் மனிதக் குரங்கின் பலத்தையும் அதனே ஆட்டி வைப்பவனின் சக்தி யையும் குறைவாக மதிப்பிட்டு வைத்திருக்கிறீர்கள்'' என்ருன்.

இதே சமயம் கோணங்கி ''வேலா. அதோ பார். அந்த மனிதர் குரங்கு தன் கட்டுகளி லிருந்து விடுபட்டு ஒரு குள்ளனேப் பிடித்துக் கொண்டு விட்டது'' என்ருன்.

வெற்றிவேலனும் ஒரு அம்பை வில்லில் வைத்து அந்த மனிதக் குரங்கிற்கும் குறி வைத்து எய் தான். அம்பு விர்ரெனப் போய் அந்த மனிதக் குரங்கின் இடுப்பில் குத்தியது. அது வலியால் கத்திய வாறே தான் பிடித்த குள்ளனேத் தூக்கி எறிந்தது.

அவனே ஓ வெனக் கத்திய வாறே உயரப் போய் கீழே விழ வந்து கொண்டிருந்தான். அது கண்டு குள்ளர் படைத் தலேவன் தன் ஆட்களே எச்சரிக்கலானுன். எல்லோருமாக உடனே கிளம்பி மனிதக் குரங்கு உள்ள மலேப் பாறையை நோக்கி வேகமாக ஓடி ஞர்கள். வெற்றிவேலனும் கோணங்கியும் அப்படி ஓடியவர் களேப் பார்த்தவாறே தாம் என்ன செய்வது என்று யோசிக்க லாஞர்கள். ஏனெனில் அதற்கு முன் குள்ளர்கள் சண்டையிட் டதை அவர்கள் பார்த்தது கிடையாதே.





## ஏன் ஆளவில்லை ?

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, அறிவாளியான நீ கூட யாருக்கோ அடிமையானது எனக்கு ஆச்சரியத்தையே விளைவிக்கிறது. பண்பற்ற ஒருவன் தனக்குக் கிடைக்கும் வாய்ப்பைக் கூட பயன் படுத்திக் கொள்ள மாட்டான். இதற்கு உதாரணமாக சிங்கண்ணன் கதையைக் கூறுகிறேன். கவனமாக கேள்'' எனக் கூறி கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகு நாட்களுக்கு முன் மாளவ தேசத்தை மானசிம்மன் என்ற



### வேதாளம் சொல்லும் கதை



மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்கு புத்திர பாக்கியமே இருக்கவில்லை. வயதும் ஆகி விட்டது. அவனுக்குப் பிறகு நாட்டை ஆள அவன் மகன் இல்லை என்ற காரணத்தால் அந்நாட்டின் மன்னனாகப் பல சதிகள் நடந்தன. மானசிம்மனைக் கொல்லவும் பல முயற்சிகள் நடந்தன. ஆனால் அவன் எப்படியோ ஒவ்வொரு முறையிலும் தப்பி வந்தான்.

ஒரு முறை ஒரு காட்டில் ஒரு புலி திரிந்து மக்களைத் துன்புறுத்துவதாக தகவல் கிடைக்கவே தன் மெய்க்காவலாளிகள் இருவரை அழைத்துக் கொண்டு புலியைத் தேடலானான்.

காட்டின் மத்தியில் ஓரிடத்தில் திடீரென அந்த இரு காவலாளிகளும் மானசிம்மனைத் தாக்கலானார்கள். மானசிம்மன் அவர்களை எதிர்த்துப் போராடினான். வயதானவன். இரு இளம் வயதினரின் தாக்குதலை எப்படி சமாளிப்பது? இனி தான் இறக்கப் போவது உறுதி என எண்ணி அவன் வீராவேசத்துடன் சண்டையிட்டான்.

அப்போது மலைச் சாதி இளைஞன் ஒருவன் ஓடி வந்தான். அவன் மானசிம்மனைத் தாக்கிய வீரர்களில் ஒருவனைத் தாக்கி அடித்து வீழ்த்திக் கொன்றான். அதன் பின் மானசிம்மனுக்கு உதவி மற்ற காவலாளியையும் கொன்று வீழ்த்தினான்.

அந்த வாலிபனின் பெயர் சிங்கண்ணன். அவனது தந்தையோ ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவன். சிங்கண்ணன் மனிதாபிமானத்தைக் கொண்டே மானசிம்மனைக் காக்க வந்தான். ஒரு கிழவனை இரு வாலிபர்கள் தாக்குவது கண்டு அவன் மனம் தாளாமல் உதவிக்கு ஓடி வந்தான். மன்னன் என்ற காரணத்திற்காக அல்ல.

மானசிம்மனும் சிங்கண்ணனைத் தன்னோடு தலைநகருக்கு வருமாறு அழைத்தான். சிங்கண்ணனும் தலைநகரைப் பார்க்க வேண்டும் என்ற

ஆசையில் மன்னனேடு கிளம்பிச் சென்ருன். வழியில் மானசிம்மன் தன்னைக் கொல்ல நடந்த பல முயற்சிகளை அவனிடம் கூறி ''இதையெல்லாம் யார் தூண்டி விடுகிருர்கள் என்று தெரிய வில்லை'' எனச் சொன்ஞன்.

இருவரும் அரண்மனையை அடைந்தனர். குளித்து விட்டு இருவரும் சாப்பிடலானுர்கள். மானசிம்மன் இரண்டு வாய் சாப் பிட்டதுமே 'ஆ' வெனத் துடித்த வாறே கீழே விழுந்தான். அதற் குக் காரணம் அவனது உணவில் கொடிய விஷம் கலக்கப் பட்டிருந் ததேயாம்.

உடனே அரசாங்க வைத்தியர் வரவழைக்கப் பட்டார். முத லமைச்சரும் வந்தார். வைத்தியர் கொடுத்த மாற்று மருந்தால் எவ் விதப் பலனும் ஏற்படவில்லை. அப்போது மானசிம்மன் ''எனக் குப் பிறகு என் நாட்டை ஆள இந்த வாலிபனே என் வாரிசு'' என சிங்கண்ணனைக் காட்டி விட்டு இறந்து போனுன்.

திடீரென இப்படி நிகழ்ந்தது பற்றி சிங்கண்ணன் திகைத்துப் போனுன். அவன் உடனேயே காட்டிற்குப் போக விரும்பி ஞலும் சட்டெனப் போக முடிய வில்லை. இதற்குள் முதலமைச்சர் அவனது மகுடாபிஷேகத்திற்கும்



ஏற்பாடு செய்து விட்டார். மான சிம்மனுக்கு ஈமக் கிரியைகள் நடந்தபின் சிங்கண்ணன் அந்நாட் டின் அரசஞன்.

சிங்கண்ணனைக் கொல்லவும் பல சதிகள் நடைபெற்றன. அவனும் எப்படியோ உயிர் தப்பி வந்தான். கொஞ்ச நாட்களுக்குப் பின் நாட்டில் கொள்ளைக்காரர் களின் அட்டகாசம் அதிகரித்தது. சேஞதிபதி அவர்களை அடக்கி அவர்களது தலைவனையும் பிடித்து சிறையில் தள்ளி விட்டான்.

சிங்கண்ணன் சிறையில் இருப்பது தன் கூட்டாளிகளில் ஒருவன் என்பதை ஊகித்து விட்டான். அவன் சேஞதிபதியுடன் சிறைச்

சாலைக்குச் சென்றான். சிறைப் பட்டிருப்பவன் தன் உயிருக்கு உயிரான தோழன் என்பதனையும் அவன் பார்த்தான்.

சிங்கண்ணன் சேனாதிபதியோடு சிறைச்சாலையில் இருந்து திரும்பி விட்டான். ஆனால் அன்று நள்ளி ரவில் சிறைச்சாலைக்குப் போய் தன் நண்பனை விடுவித்து அவனோடு காட்டிற்கே போய் விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே சிங்கண்ணன் ஏன் அரச பதவியை விட்டு விட்டுப் போனான்? தன்னால் நாட்டை ஆள முடியாது என்றா? அல்லது தன் நண்பனைச் சிறைச்சாலையில் கண்டு மனம் குழம்பிப் போனானா? அரசனாக இருந்த அவன் வெளிப் படையாக அவனை விடுதலை செய் திருக்கலாமே. அப்படிச் செய்யா மல் ஏன் அவனோடு நாட்டை விட்டே காட்டிற்குப் போய் விட் டான்? இக்கேள்விகளுக்கு பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சிங்கண்ணன் தன் நண்பனைச் சிறைப்படுத்த தன் ஆட்சியே காரணம் என்பதைக் கண்டான். யாருக்குமே அவனும் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்த வன் என்று தெரியாது. சிறைப் பட்டிருப்பவனை வெளிப்படையாக விடுதலை செய்தால் அவன் இன்னா னெனத் தெரிந்து போய் விடும். அவன் காட்டிற்கே செல்ல விரும் பினான். ஆனால் சூழ்நிலை அவனை அரசனாக்கியது. அந்த சூழ்நிலையில் இருந்து விடுபட எண்ணியே தன் நண்பனை யாருக்கும் தெரியாமல் விடுவித்து காட்டிற்கே போய் விட் டான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்தப் பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி வேதாளம் மீண்டும் முருங்க மரத் தில் ஏறிக் கொண்டது.





# உண்டா, இல்லையா?

முரளி தன் கிராமத்திற்கு வழக்கம் போல அந்த வார இறுதியிலும் வந்திருந்தான். அப்போது அவனைக் காண வந்த கந்தசாமி என்ற விவசாயி ''தம்பி, உன்னைத் தான் பார்க்க வந்தேன். நீயோ வக்கீலுக்குப் படித்து பட்டணத்தில் வக்கீலாகத் தொழில் புரிகிருய். இந்த ஊர் வட்டிக்கடை விநாயகம் என்னை ஏமாற்றி விட்டான். ஏதோ ஒரு முடை என்று அவனிடம் இருநூறு ரூபாய் கடன் வாங்கினேன். எனக்குத் தான் எழுதப் படிக்கத் தெரியாதே. அதனுல் பத்திரத்தில் கைரேகை நாட்டினேன். இருநூறு ரூபாய் பணம் கொடுத்தான். ஆனுல் பத்திரத்தில் என் ஒரு ஏக்கர் நிலத்தையும் அடமானம் வைத்திருப்பதாக எழுதி இரண்டு பேர்களைச் சாட்சிகளாயும் போட்டிருக்கிருன். இப்போது என் நிலத்தைக் கொடுக்கும்படி கேட்கிருன்'' என்ருன்.

முரளியும் ''நீ கவலைப்படாதே. அப்படியெல்லாம் மிரட்டி அவன் உன் நிலத்தை தனதாக்கிக் கொள்ள முடியாது இப்போது வந்துள்ள சட்டங்களின்படி அப்படி ஏதாவது செய்தால் அவனைக் கம்பி எண்ண வைக்கலாம். அது சரி. நீ ஏன் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளக் கூடாது? அப்படிக் கற்றுக் கொண்டிருந்தால் இப்படி விநாயகத்திடம் ஏமாந்திருக்க வேண்டாமே'' என்று சொன்னுன்.

கந்தசாமியும் ''அந்த பாக்கியம் எனக்கு இல்லை. சரஸ்வதிதேவி அருள் புரிந்தால் தானே படிப்பு ஏறும்? அவள் அருள் தான் இல்லையே'' என்ருன். அது கேட்டு முரளி ''சரஸ்வதிதேவியின்

மா. சுந்தரராமன்

அருளா? நீ முயற்சி செய்து பார். நான் இந்த ஊரில் முதியோர்களுக்காக ஒரு இரவுப் பள்ளியை ஏற்படுத்துகிறேன். வாரத்தில் இரண்டு நாட்கள் நானே சொல்லிக் கொடுக்கிறேன். மற்ற ஐந்து நாட்களில் என் மனைவி கற்றுக் கொடுப்பாள். அவளும் படித்தவளே. இதற்காக அவளை இந்த ஊரிலேயே விட்டுப் போகிறேன்'' என்றான்.

கந்தசாமியோ "அதென்னவோ. சரஸ்வதியின் தேவியின் அருள் கிடைத்தாலே எனக்கும் என் போன்ற மற்றவர்களுக்கும் படிப்பு வரும். என்னைப் போல இந்த ஊரில் இன்னும் பலர் இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் நீயே கேட்டுப் பார். அப்போது தான் நான் சொல்வது உண்மை என்று தெரியும்'' என்றான்.

முரளியும் "சரி. கேட்டுப் பார்க்கிறேன். நீ உன் நிலத்தைப் பற்றி கவலைப்படாதே. விநாயகம் மறுபடியும் வந்தால் என்னைப் பார்த்து பேசச் சொல்'' என்று கூறி கந்தசாமியை அனுப்பினான்.

அதற்குப் பிறகு ஊரிலிருந்த சில வயதானவர்களிடம் அவன் விசாரிக்கலானான். அவர்கள் எல்லோரும் எழுதப் படிக்க தெரியாதவர்களே. எல்லோருமே "சரஸ்வதிதேவியின் அருள் இருந்தால் தானே படிப்பு வரும்'' என்று ஒரு முகமாகக் கூறினார்கள். இதைக் கேட்ட முரளி அவர்



களது அறியாமைக்கும் அப்பாவித் தனத்திற்கும் இரக்கப் படலானான். படிக்காமல் இருப்பதால் பிறரிடம் ஏமாறுவதை அவர்கள் உணர்ந்தும் தேவியின் அருள் இல்லை என்று கூறி ஒரு முயற்சியும் செய்யாமல் இருக்கிறார்களே என்று அவன் எண்ணி வருந்தினான். அவர்களது அந்த மூட நம்பிக்கையைப் போக்க என்ன செய்வது என்றும் எப்படி அவர்களை எழுதப் படிக்க வைப்பது என்றும் யோசிக்கலானான். முடிவில் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது.

அவன் பல காகிதத் துண்டுகளை எடுத்து அதன் மீது எலிமிச்சம் பழரசத்தால் 'உண்டு' என்று எழுதி அவற்றை உலர வைத்தான். அவை உலர்ந்த பின் சாதாரணக் காகிதத் துண்டுகளாகவே இருந்தன. ஒரு எழுத்து கூடத் தெரியவில்லை.

அடுத்த தடவை அவன் ஊருக்கு வந்தபோது வயதான படிக்கத் தெரியாதவர்களைக் கூப்பிட்டு ''நீங்களெல்லோரும் சரஸ்வதி தேவியின் அருள் உண்டு என்று தெரிந்தாலே படிப்பு ஏறும் என்று சொல்கிறீர்கள். இதுவரை யாருமே தேவியின் அருள் உண்டா இல்லையா என்று பார்க்கவில்லை. தேவியும் நம்முன் தோன்றி வரம் கொடுக்காது. ஏதாவது ஒரு சூசனை செய்து அறிவுறுத்தும். நீங்கள் எல்லோரும் நம் ஊர் ஆற்றிற்கு ஒரு



காகிதத் துண்டை எடுத்து ஆற்றின் புனித நீரில் முக்கிப் பாருங்கள். தேவி கண்டிப்பாக அருள் புரிவாள். இதோ ஆளுக்கு ஒரு வெள்ளைக் காகிதத் துண்டு கொடுக்கிறேன்'' என்றான்.

எல்லோருமே ''ஆகா. தேவியின் அருள் மட்டும் உண்டு என்றால் எங்களுக்குப் படிப்பு ஏறாதா என்ன? இதுவரை நீ சொன்னபடி பரீட்சித்துப் பார்க்கவில்லை. இப்போதே பார்க்கிறோம்'' எனக் கூறி அவனிடமிருந்து ஆளுக்கு ஒரு காகிதத் துண்டாக வாங்கிக் கொண்டு நதிக்குச் சென்றனர்.

ஆண்களும் பெண்களும் போட்டி போட்டுக் கொண்டு தாம் வாங்கிக் கொண்ட காகிதத் துண்டை ஆற்று நீரில் முக்கி அமிழ்த்தி ''தேவி. எனக்கு உன் அருள் உண்டா?'' எனக் கூறியவாறே அதனை வெளியே எடுத்துப் பார்த்தார்கள். எல்லோர் காகிதத் துண்டுகளிலும் ''உண்டு'' என்ற பதிலே இருந்தது.

எல்லோருமே தேவியின் அருள் தமக்கு உண்டு எனக் கூறி மகிழ்ந்தார்கள். முரளியும் அன்றே இரவுப் பள்ளிக் கூடத்தை ஆரம்பித்து விட்டான். அவன் தன் மனைவியை அந்த ஊரில் கொஞ்ச நாட்கள் இருக்கச் சொல்லி அந்தப் பள்ளிக் கூடத்தை நடத்தும் பொறுப்பை அவளிடம் விட்டான். வாரக்கடைசியில் அவனும் வந்து வகுப்புகளை நடத்தலான்.

கிராமத்து முதியவர்கள் உற்சாகத்துடன் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டனர். அதற்குப் பிறகு தாம் எழுதுவது என்ன என்பதை அறிந்து கொண்டே பத்திரங்களில் கை எழுத்துப் போடலாயினர். விநாயகம் போன்றவர்களால் அவர்களை அது முதல் ஏமாற்ற முடியவில்லை. அவர்களது பொருளாதார நிலையும் உயரலாயிற்று.





# பணமா பெரிது?

கோவிந்தன் என்ற ஏழைச் சிறுவன் தன் சிறு வயதிலேயே பெற்றோர்களை இழந்து விட்டான். எனவே அவனை அவனது தாய் மாமன் தன் வீட்டில் வைத்துக் கொண்டு வளர்க்கலானான். அவனது மாமி அவன் தலையில் எல்லா வேலைகளையும் சுமத்தினாள்.

கோவிந்தனின் மாமாவிற்கு செங்கமலம் என்ற மகள் இருந்தாள். கோவிந்தனுக்கு செங்கமலம் ஏற்ற பெண்தான் என ஊரார் பேசிக் கொண்டனர். அதற்கு ஏற்றது போல கோவிந்தன் கஷ்டப்பட்டு வேலை செய்த போதெல்லாம் செங்கமலமும் தன்னாலான உதவியைச் செய்து வந்தாள். இதனால் செங்கமலத்திற்கு தன் மீது அளவு கடந்த ஆசை இருப்பதாக கோவிந்தன் நினைத்து கொண்டான்.

செங்கமலம் வளர்ந்து வயதான பெண் ஆனாள். கொஞ்சம் கொஞ்சமாக அவள் கோவிந்தனுடன் நெருங்கிப் பழகுவது குறையலாயிற்று. கோவிந்தனோ எப்போதும் போல அவளுடன் சகஜமாகவே பழகி வந்தான்.

ஒரு நாள் செங்கமலம் தனியாக உட்கார்ந்திருக்கும் போது கோவிந்தன் பூனை போல நடந்து போய் தன் இரு கைகளாலும் அவள் கண்களைப் பொத்தினான். இதை அப்போது அங்கு வந்து கொண்டிருந்த மாமி பார்த்து விட்டு ''நன்றாக இருக்கிறது! வயதுப் பெண்ணோடு என்னடா விளையாட்டு? நாளைக்கு அவளுக்கு கல்யாணம் என்று நடந்து அவள் கணவன் வீட்டிற்குப் போக வேண்டாமா! இப்படியெல்லாம் நீ செய்தால் அவளுக்குக் கல்யாணம் எப்

சுகுமாரி ராமன்



படி நடக்கும்?'' என்ருள். அப்போது கோவிந்தன் ''அவளை நான் தானே கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். அவள் ஏன் வேறு வீட்டிற்குப் போக வேண்டும்?'' என்று கேட்டான் அப்பாவித் தனமாக.

அவனது மாமியோ ''உன் அழகிற்கு கல்யாணம் வேறு? தண்டச் சோறு போடுவது போதாதா? இன்னொரு தடவை உன் கை அவள் மீது பட்டால் உன் கையை ஒடித்து விடுவேன். ஜாக்கிரதை'' எனக் கூறி செங்கமலத்தை இழுத்துக் கொண்டு அங்கிருந்து போய் விட்டாள். அவன் தன் தாய் மாமனிடம் நடந்ததையெல்லாம் சொல்லி ''ஏன் மாமா, செங்கமலத்தை எனக்குக் கல்யாணம் செய்து வைக்கப் போவதில்லையா?'' என்று கேட்டான். மாமனும் ''போடா போ. கையில் கால் காசு இல்லாத உனக்கு அவளை எப்படிக் கொடுக்க முடியும்? உன்னல் நாலு காசு சம்பாதித்து குடும்பம் நடத்த முடியுமா?'' எனக் கேட்டான்.

கோவிந்தனும் ''நாலு காசு என்ன, நாலு லட்சம் கூட சம்பாதிக்க என்னல் முடியும். மனிதனுக்குப் பணமா பெரிது? குணம் தான் முக்கியம். எனக்கும் செங்கமலத்தைக் கல்யாணம் செய்து கொள்ளவே ஆசை'' என்ருன்.

மாமனே ''ஆசையாவது! தோசையாவது!! அதெல்லாம் இல்லை. நீ நாலு லட்சம் சம்பாதித்துக்கொண்டு வா. நானும் உனக்கு செங்கமலத்தை கல்யாணம் செய்து வைக்கிறேன்'' என்ருன்.

கோவிந்தனும் ''மாமா, நான் சம்பாதித்துக் கொண்டு வருகிறேன்'' எனக் கூறி விட்டு உடனேயே அந்த வீட்டை விட்டுக் கிளம்பினுன். ஆனல் வெளியே போனதும்தான் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் பணம் சேர்ப்பது சுலபமல்ல என்பது அவனுக்குத் தெரிந்தது. நேர் வழியில் இல்லாமல் குறுக்கு வழியில் சம்பாதித்

தாலே நிறையப் பணம் சேரும் என அவன் கண்டான்.

ஒரு நாள் இரவு ஒரு ஊரில் அவன் ஒரு வீட்டுத் திண்ணை மீது படுத்திருந்தான். இப்போது இரண்டு திருடர்கள் யார் வீட்டிலோ திருடி விட்டு திருடிய பொருள்களை மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். சட்டென கோவிந்தன் எழுந்து அவர்களை வழி மறித்தான்.

அப்போது ஒரு திருடன் ''தம்பீ நீ வீட்டிலே சொல்லிக் கொண்டு வந்து விட்டாயா?'' எனக் கூறி ஒரு குத்து விட்டான். ஆனால் கோவிந்தனோ சற்றும் பயப்படாமல் திருப்பி ஒரு குத்து விட்டான். அந்த ஒரே குத்தில் அந்தத் திருடன் கீழே விழுந்து விட்டான். மற்ற திருடனோ நடுநடுங்கலானான்.

அப்போது கோவிந்தன் ''உம். அது யாருடையது? எப்படி எடுத்து வந்தீர்கள்? ஏன் இப்படிக் கேவலமான பிழைப்பு பிழைக்கிறீர்கள்?'' எனக் கேட்டான்.

அதற்கு அந்தத் திருடன் ''பணம் சம்பாதிக்கப் பல வழிகள் உண்டு. நிறையப் பணம் வேண்டும் என்றால் இப்படித் திருடினால் தான் கிடைக்கும். பணம் சேர்த்து வைத்திருப்பவர்கள் மட்டும் நேர்வழியிலா சம்பாதிக்கிறார்




கள்? பணம் எப்படி வந்தது என்று கேட்கவே கூடாது. எவ்வளவு வந்தது என்றே கேட்க வேண்டும்'' என்றான்.

அது கேட்டு கோவிந்தன் "ஓகோ எனக்கும் நிறையப் பணம் தேவை. உழைத்து உழைத்துப் பார்த்தேன். பணம் சேர்க்க முடியவில்லை. நானும் உங்கள் கூட்டத்தில் சேரட்டுமா?'' எனக் கேட்டான்.

அந்தத் திருடனும் ''ஆகா. திருடர் கூட்டம் என்பதில் ஒரு கணக்கு கிடையாது. எவ்வளவு பேர் வேண்டுமானாலும் இருக்கலாம். இதில் வேலை காலி இல்லை என்ற பேச்சிற்கே இடம் இல்லை.



உன்னைப் போல உடல் வலிமையும் தைரியமும் உள்ளவர்கள் எங்கள் கூட்டத்தில் சேர்ந்தால் நிறைய வருமானமே வரும்'' என்றான்.

கோவிந்தனும் அந்தத் திருடர் கூட்டத்தில் சேர்ந்து கொண்டான். அவனே கொஞ்ச நாட்களில் அத்திருடர் கூட்டத் தலைவனாகவும் ஆகி விட்டான். கொள்ளை அடித்து ஏராளமாகப் பணம் சேர்த்து மறைவிடத்தில் வைத்தான். அவன் கொள்ளையடிப்பதிலும் சில விதிமுறைகளைக் கடைபிடித்து வந்தான். ஈவு. இரக்கம் என்பதெல்லாம் காட்டி வந்தான். ஒரு முறை தன் மாமன் மகளான செங்கமலத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவனுக்கு ஏற்பட்டது. எனவே தன்னுடன் நான்கு திருடர்களை அழைத்துக் கொண்டு தன் மாமனின் ஊருக்குச் சென்றான். யாவரும் பெரிய பணக்காரர்கள் போல பகட்டான உடை உடுத்திச் சென்றனர்.

கோவிந்தன் தன் தாய்மாமனின் ஊரை அடைந்த போது அன்றிரவு செங்கமலத்திற்குக் கல்யாணம் நடக்கப் போகிறது எனத் தெரிந்து கொண்டான். செங்கமலத்தை மணக்கப் போகும் வாலிபனையும் அவனது தந்தையையும் கண்டு கோவிந்தன் திடுக்கிட்டுப் போனான். ஏனெனில் அவர்கள் இருவரும் பக்காத் திருடர்கள். பணக்காரர்களாக நடித்து தன் மாமனுக்கு பணத்தாசை காட்டி விட்டார்கள் என கோவிந்தன் அறிந்து கொண்டான். உடனே தன் நண்பர்கள் நால்வரிடமும் அவன் ஏதோ கூறினான். அவர்களும் தலையை ஆட்டினார்கள்.

முகூர்த்தம் ஆரம்பமாகியது. புரோகிதர் மந்திரங்களை ஓதினார். வாத்திய இசை காதைப் பிளந்தது. எங்கும் பேச்சும் சிரிப்புமாக இருந்தது. மணப்பெண் ஒரு அறையில் இருந்தாள். அவளோடு வயதான ஸ்திரீ துணைக்கு இருந்தாள். ஒரு வேலையாள்

வந்து அந்த வயதான ஸ்திரீயை யாரோ கூப்பிடுவதாகச் சொல்லவே அவள் எழுந்து போனாள். சற்று நேரத்திற்கெல்லாம் இன்னொரு வேலையாள் வந்து செங்கமலத்திடம் ''உன்னைப் பார்க்க யார் வந்திருக்கிறார்கள் தெரியுமா? வந்து பார்'' எனக் கூறி வீட்டின் பின்புறம் அழைத்துப் போனான்.

சற்று நேரத்திற்கெல்லாம் புரோகிதர் ''கல்யாணப் பெண்ணை அழைத்து வாருங்கள்'' என்றார். எல்லோரும் ஓடினார்கள். ஆனால் பெண்ணைக் காணோம் முகூர்த்த வேளை போய் விட்டது. ஒரே கூச்சலும் குழப்பமுமாக இருந்தது.

எல்லோரும் களைத்துப் படுத்தனர். அப்போது மணமகனும் அவன் தந்தையும் அந்த வீட்டில் கிடைத்ததையெல்லாம் எடுத்து மூட்டை கட்டிக் கொண்டு இருட்டோடு இருட்டாகக் கிளம்பினார்கள். அவர்கள் கொஞ்ச தூரம் போனதுமே கோவிந்தனும் அவனது ஆட்களும் சேர்ந்து அவர்கள் மீது பாய்ந்து அவர்களைப் பிடித்து வந்தனர்.

கோவிந்தன் தன் மாமனிடம் "மாமா, என்னை விட இவனா நல்ல மாப்பிள்ளை?'' எனக் கேட்டான். அப்போது கோவிந்தனின் மாமன் உண்மை தெரிந்து கொண்டு ''கோவிந்தா! நீதான் சமயத்தில் வந்து என்னைக் காப்பாற்றினாய். இல்லா விட்டால் செங்கமலத்தின் வாழ்வே பாழாகி இருக்கும்'' என்றான்.

அப்போதே கோவிந்தனுக்கும் செங்கமலத்திற்கும் அதே பந்தலில் கல்யாணம் நடந்தது. கோவிந்தனும் திருடர் கூட்டத்தை விட்டு வந்து தன் மாமன் வீட்டிலேயே செங்கமலத்துடன் சுகமாக இருந்து விவசாயத்தைக் கவனித்து க்கொண்டு வாழ்ந்து வரலானான்.





# தங்கம் செய்ய முடியுமா?

தங்கவேலனும் பாண்டியனும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர்கள். இருவருக்கும் தங்கம் செய்யும் மாய வித்தையைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. கண்ட சாது சன்னியாசிகளிடம் எல்லாம் ''உங்களுக்குத் தங்கம் செய்யும் முறை தெரியுமா? எங்களுக்குக் கற்றுக் கொடுங்களேன். நாங்கள் உங்கள் சீடர்களாக இருந்து பணி செய்கிறோம்'' எனக் கேட்டுப் பார்த்தனர்.

எல்லோருமே தமக்குத் தெரியாது என்றனர். ஆனால் ஒரு சன்னியாசி மட்டும் ''எனக்குத் தெரியாது. என் குருவிற்குத் தெரியும், அதோ தெரியும் மலையில் ஒரு குகைக்குள் அவர் இருக்கிறார்'' என்றான். அது கேட்டு உடனேயே இருவரும் அந்த சன்னியாசியோடு அந்த மலையிலுள்ள குகைக்குப் போய் அங்கிருந்த சாதுவை வணங்கினார்கள். அவரும் ''எனக்கு குருதட்சணையாக முதலில் நீங்கள் ஆளுக்கு ஐந்து பொற் காசுகள் வீதம் கொடுங்கள். அப்போதுதான் உங்களுக்கு அந்த வித்தையைக் கற்பிப்பேன்'' என்றார்.

இருவரும் ஊர் திரும்பி தாம் சேர்த்து வைத்திருந்த காசுகளைக் கொண்டு ஐந்தைந்து பொற் காசுகள் வாங்கிக் கொண்டு அந்த சாதுவைக் காணச் சென்றனர். அந்த சாதுவும் அந்தப் பொற் காசுகளை வாங்கிக் கொண்டு "நான் ஒரு மந்திரம் சொல்கிறேன். அதனை எந்த ஓலையிலோ காகிதத்திலோ எழுதி வைத்துக் கொள்ளக் கூடாது. மனப் பாடம் செய்து நினைவில் வைத்துக் கொள்ள

சாமி. துரைராஜன்

வேண்டும். அப்போதுதான் மந்திரம் பலிக்கும்'' என்ருர். பிறகு அவர் அந்த மந்திரத்தை இருவருக்கும் கூறினுர்.

தங்கவேலு அதனைச் சட்டெனக் கற்றுக் கொண்டு விட்டான். பாண்டியனுல் அவ்வாறு செய்ய முடியவில்லை. அவன் சாதுவிடம் என்ன செய்வது என்று கேட்கவே சாதுவும் ''உனக்கு மந்திரம் உச்சரிக்க வரப் போவதில்லை. தங்கவேலு முதல் முறையாக மந்திரம் சொல்லி தங்கம் செய்யப் பரீட்சிப்பான். அப்போது கிடைக்கும் தங்கத்தை நீ எடுத்துக் கொள். அதற்குப் பிறகு அவன் தங்கம் செய்து அவனே வைத்துக் கொள்ளட்டும். தங்கவேலுவுக்கும் மாதத்திற்கு ஒரு முறை பௌர்ணமியன்றே இப்படி தங்கம் செய்யும் சக்தி கிடைக்கும். அந்த சக்தியும் அன்று ஒரு முறை தங்கம் செய்ய மட்டுமே பயன்படும்'' என்று கூறினுர்.

பின்னர் சாது ஒரு பெரிய குடம் கொண்டு வரச் சொல்லி அது நிறைய மணலைப் போட்டு அதன் வாயின் மீது இலைகளைப் போட்டார். தங்கவேலுவைக் கண்ணை மூடிக் கொண்டு மந்திரத்தை ஓதும்படிக் கூறினுர். அவனும் அவ்வாறே செய்தான். சற்று நேரத்திற்குப் பிறகு சாது




இலைகளை அகற்றவே குடத்தில் பள பள வென மின்னும் தங்க நாணயங்கள் இருந்தன.

சாது அந்தக் குடத்தை எடுத்துப் பாண்டியனிடம் கொடுத்து ''நீ இதோடு திருப்தி அடை. தங்கவேலு அடுத்த பௌர்ணமியன்று தங்கம் செய்து எடுத்துக் கொள்ளட்டும்'' என்று சொல்லி இருவரையும் அனுப்பி வைத்தார்.

தங்கவேலனும் பௌர்ணமி வரும் நாளை ஆவலுடன் எதிர் பார்த்திருந்தான். பாண்டியனே தனக்குக் கொடுத்த குடத்தை இரகசியமாக ஓரிடத்தில் புதைத்து வைத்தான். சில நாட்களான பின் பௌர்ணமி வந்தது. தங்க

வேலு தன் வீட்டிலிருந்த மிகப் பெரிய அண்டாவை எடுத்து அது நிறைய மணலைப் போட்டு இலைகளால் மூடி சாது தனக்குச் சொல்லிக் கொடுத்த மந்திரத்தை உச்சரிக்கலானான்.

கொஞ்ச நேரத்திற்குப் பின் இலைகளை எடுத்து அவன் பார்த்த போது அதில் மணல்தான் இருந்தது. பொற்காசுகள் இருக்கவில்லை. உடனே அவன் பாண்டியனின் வீட்டிற்கு ஓடினான். அவனிடம் எல்லாம் சொல்லவே பாண்டியனும் ''நீ மந்திரத்தைத் தவறாகச் சொல்லி இருப்பாய். போனது போகட்டும். என்னிடம் உள்ள தங்கக்காசுகளில் பாதியை உனக்குக் கொடுக்கிறேன். கிடைத்ததே போதும் என்று எண்ணி நாம் திருப்தி அடைவோம். மேலும் அது போதும் நாம் வாழ்நாள் முழுவதும் சுகமாக வாழ'' எனக் கூறி தான் மறைத்து வைத்து இருந்த குடத்தை எடுத்து வந்தான். குடத்தின் வாயைத் திறந்து அதிலிருந்த காசுகளை அவர்கள் எடுத்த போது அவை கருப்பாகப் போயிருந்தன. அதைக் கொண்டு போய் உள்ளூர் தட்டானிடம் காட்ட அவனும் ''பூ! இதுவா! ஒரு பொற்காசு கொடுத்தால் இவ்வளவு பித்தளை நாணயங்களும் முலாம் பூசிக் கிடைக்கும்'' என்றான்.

இருவரும் மலையை நோக்கி ஓடி சாது இருந்த குகையை அடைந்தனர். அங்கு சாது இருக்கவில்லை. ஒரு கடிதம் மடிக்கப்பட்டு வைக்கப்பட்டிருந்தது. அதில் ''தம்பிகளே. மந்திரத்தால் தங்கம் செய்ய முடியாது. தந்திரத்தால் அடையலாம். உங்களிடமிருந்து பத்து பொற்காசுகள் நான் பெற்றது தந்திரத்தாலே. நீங்களும் இப்படித் தந்திரம் செய்தால் தங்கம் அடையலாம். ஆனால் மந்திரத்தால் அல்ல'' என எழுதப் பட்டிருந்தது.





# பாட்டில் பிசாசு

ஒரு ஊரில் காசிம் என்றும் பஷீர் என்றும் இரு நண்பர்கள் இருந்தார்கள். காசிமிற்கு எப்போது பார்த்தாலும் ஒரு பிரச்னை இருந்து கொண்டே இருக்கும் அதிலிருந்து மீள்வதற்குள் மற்றொரு பிரச்னை முன் வந்து நிற்கும். பஷீர்தான் அவ்வப்போது கை கொடுத்து அவனை மீட்டு வருவான்.

இருவரும் ஏதாவது ஒரு தொழில் செய்து பணம் சம்பாதித்துக் கல்யாணம் செய்து கொண்டு சுகமாக வாழலாம் என்று நினைத்தார்கள். அவர்களுக்குக் குறிப்பிடத்தக்க வேலை எதுவும் செய்யத் தெரியாது. வியாபாரம் செய்யவோ முதல் வேண்டும். எனவே இருவரும் தம் பழைய வீடுகளை விற்று வாசனைத் திரவியங்களை வாங்கி பல புட்டிகளில் நிரப்பி அடைத்து ஆளுக்கு ஒரு பெட்டியில் போட்டு எடுத்துக் கொண்டு அவற்றை விற்க ஊர் ஊராகக் கிளம்பினார்கள்.

காசிம் கிழக்கு பக்கமாகச் சென்றான். காட்டில் வெகு தூரம் போய் இருட்டும் போது காட்டையும் கடந்து விட்டான். ஆனால் அதற்குள் அவன் உடல் வியர்த்துப் போய் விட்டது. தன் உடையும் உடலும் வியர்வை நாற்றம் அடிப்பது கண்டான். வாசனைப் பொருள் விற்பவன் என்றால் அவன் சென்றாலே கூடவே வாசனை 'கம்' மென்று வீசவேண்டாமோ?

எனவே காசிம் ஒரு மரத்தடியே தன் பெட்டியை வைத்து உட்கார்ந்து கொண்டு அதனைத் திறந்தான். ஒரு அத்தர் பாட்டிலை எடுத்து அதற்குள் பஞ்சை விட்டு அத்தரில் நனைத்து தன் ஆடைகள் மீது அத்தரை பூசிக்கொண்டான்.

இலட்சுமி நாகரத்தினம்



அப்போது அந்த மரத்தின் கிளை கள் ஆடின. ஒரு மிகப் பெரிய பெண் உருவம் அவன் முன் தோன்றி ''என்ன செய்து கொண் டிருக்கிறாய்?'' என்று கேட்டது. அது ஏதோ ஒரு பிசாசு என ஊகித்துக் கொண்ட காசிம் ''தெரியவில்லையா? அத்தர் பூசிக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

உடனே அந்த உருவம் ''எனக் கும் கொஞ்சம் பூசிவிடு'' என்றது. காசிமும் ''உனக்கு நான் பூசு வதா? நீயே மிகச் சிறிய உருவ மாகி இந்த அத்தர் பாட்டிலுக் குள் நுழைந்து விட்டு வெளியே வந்தால் உன் உடல் முழுவதும் அத்தர் இருக்கும்'' என்றான்.

உடனே பிசாசும் சிறிய உரு வத்தை எடுத்துக் கொண்டு அவன் திறந்து வைத்த அத்தர் பாட்டி லுக்குள் நுழைந்தது. காசிம் சட் டென மூடியை எடுத்து அந்த பாட்டிலை மூடி பெட்டிக்குள் வைத்தான். பிறகு பெட்டியை எடுத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பி ஒரு கிராமத்தை அடைந்தான்.

அங்கு ஒரு வீட்டில் இடம் பெற்று அவன் படுத்து தூங்கி விட்டு மறுநாள் காலையில் எழுந்து தன் பெட்டியுடன் தலை நகரை நோக்கி நடந்தான். இரண்டு நாட்களுக்குப் பிறகு தலை நகரையும் அடைந்தான்.

அவன் அரசனை பேட்டி கண்டு தன்னிடம் உயர்தர வாசனை திர வியங்கள் உள்ளதாகக் கூறி அரச குமாரியின் கல்யாணத்திற்கு அவை தனது பரிசுகளாக இருக் கட்டும் எனத் தன் பெட்டியையே வைத்தான்.

அரசனும் உடனே தன் மகளை வரவழைத்தான். அவளும் அந் தப் பெட்டியைத் திறந்து ஒரு பாட்டிலை எடுத்து அதன் மூடியைத் திறந்து வாசனை பார்த்தாள். மறு நிமிடமே அவள் பேய் பிடித்த வள் போல ''அடேடே! எனக்குக் கல்யாணம். டும். டும். டும். பிப் பிப் பிப்பி'' என்று குதிக்கலானாள்.

நன்றாக இருந்த தன் மகள் திடீரென புத்தி மாறிக் கத்துவதற்குக் காரணம் காசிம் கொண்டு வந்த வாசனைப் பொருள்தான் என்று முடிவு செய்து அவன் காசிமை உடனே சிறையில் அடைக்குமாறு கட்டளையிட்டான்.

அப்போது தான் காசிமிற்கு விஷயம் புரிந்தது. அரசகுமாரி எடுத்த பாட்டிலுக்குள் பிசாசு இருந்திருக்கிறது. அவள் அதை எடுத்து மூடியைக் கழற்றியதும் அப்பிசாசு வெளியே வந்து அவளைப் பிடித்துக் கொண்டு விட்டது. அதை விரட்ட வேண்டுமே.

உடனே காசிம் அரசனுக்கு தான் அரசகுமாரியை குணப்படுத்துவதாகச் செய்தி அனுப்பினான். அரசனும் அவனை வரவழைத்து ''நீ எப்படி குணப்படுத்துவாய்?" என்று கேட்டான்.

காசிமும் ''அரசே, அரசகுமாரியை ஒரு பிசாசு பிடித்துக் கொண்டிருக்கிறது. அதை நான் ஒரு அத்தர் பாட்டிலில் அடைத்து வைத்திருந்தேன். அந்த பாட்டிலை எடுத்து அரசகுமாரி மூடியைத் திறந்து விட்டாள். எனவே அதனுள் இருந்த பிசாசு அவளைப் பிடித்துக் கொண்டு விட்டது. நான் அரசகுமாரியைப் பிடித்த பிசாசை விரட்டுகிறேன். இதற்காக நீங்கள் உங்கள் மகளை எனக்



குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும்'' என்றான்.

இது கேட்டு அரசன் கோபம் கொண்டு ''அடே. என் மகளை மணக்கவா இப்படி சூழ்ச்சி செய்தாய்? உன்னைத் தூக்கில் போடுகிறேன். இன்றைக்கு எட்டாவது நாள் இவனைத் தூக்கிலிட்டுக் கொல்லுங்கள்'' எனத் தன் வீரர்களுக்கு கட்டளையிட்டான்.

இதற்குள் பஷீருக்கு காசிம் அரசனிடம் அகப்பட்டுக் கொண்டு தூக்கு தண்டனை பெற்ற தகவல் தெரிந்தது. அவன் ஓடோடி தலைநகருக்கு வந்தான். அவன் காசிமைச் சந்தித்து எல்லாவற்றையும் விவரமாகத் தெரிந்து கொண்

டான். அவன் அரசனை உடனே பேட்டி கண்டு தான் அரச குமாரியை குணப் படுத்துவதாகக் கூறினுன்.

அரசனும் ''நீயும் என் மகளைக் கல்யாணம் செய்து கொடு என்று கேட்கப் போகிருயா?'' என்று ஏளனமாகக் கேட்டான். பஷீர் ''இல்லை இல்லை. என்னை அவள் முன் பேச விடுங்கள். நான் என்ன சொன்னுலும் யாரும் குறுக்கிடக் கூடாது. மேலும் எனக்கு ஒரு ஆள் உயரமுள்ள கண்ணுடி ஜாடி மூடியோடு கொடுக்கவும் வேண்டும்'' என்ருன்.

அரசனும் அப்படிப்பட்ட ஜாடியைக் கொடுக்கவே பஷீர் அந்த ஜாடியைக் கொண்டு போய் அரச குமாரியின் முன் வைக்கச் செய்தான். பிறகு அங்குள்ள வீரர்களிடம் ''இந்த அரசகுமாரியை இந்த ஜாடிக்குள் போட்டு மூடுங்கள்'' என்று உரக்கக் கத்திஞன். மறு நிமிடமே அரசகுமாரி 'ஆ' வென்று அலறிக் கீழே விழுந்தாள். அவளைப் பிடித்திருந்த பிசாசு தான் மறுபடியும் சிறைப் பட்டிருக்க வேண்டுமே என பயந்து அரசகுமாரியை விட்டு விட்டு ஓடிப் போய் விட்டது.

அரசகுமாரியின் மயக்கம் தெளிய சற்று நேரம் ஆயிற்று. அவளுக்கு தன் உணர்வு வந்ததும் முன் போல நன்கு பேசலாஞள். சித்தப் பிரமை இருக்கவில்லை.

அரசன் மிகவும் மகிழ்ந்து போய் பஷீருக்கு நிறையப் பரிசுகள் கொடுத்தான். மேலும் பஷீர் வேண்டியபடி காசிமின் தண்டனையையும் ரத்து செய்து அவனையும் விடுதலை செய்தான். அவனுக்கும் பரிசுகள் கொடுத்தான்.

இரு நண்பர்களும் அரசன் கொடுத்த பரிசுகளோடு தம் ஊருக்குத் திரும்பி வந்தனர். அவர்கள் நல்ல வீடுகளை வாங்கி கல்யாணம் செய்து கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தனர்.



# வீண் பொறாமை

பஞ்சு சாஸ்திரி ராமநாதன் என்ற பையனைத் தன் வீட்டில் வைத்து வளர்த்து வந்தார். இராமநாதன் அந்த வீட்டில் வேலைக்காரன் போலானான். படிப்பு இல்லை. ஆனால் சாஸ்திரியின் மகனை கிட்டு எல்லா சாஸ்திரங்களையும் கற்கலானான்.

ராமநாதன் சித்திரம் தீட்டுவதில் வல்லவன். ஒரு முறை ஜமீன்தாரரின் பிறந்த நாளின் போது சாஸ்திரி தன் மகனை கிட்டுவுடன் சென்றார். ஜமீன்தாரரும் எல்லோருடனும் பேசி அவர்களிடம் அடையாளமாக நீலப் பூவை கொடுத்து மறு நாள் பரிசு பெற்றுக் கொள்ளுமாறு கூறினார். கிட்டுவுக்கு நீல நிறப் பூ கிடைத்தது. ஓவியன் ராமநாதனுக்கு மட்டும் சிவப்பு நிறப் பூ கிடைத்தது. இது கண்டு சாஸ்திரி அந்தப் பூவை வாங்கி கிட்டுவிடம் கொடுத்து விட்டு ராமநாதனிடம் நீல நிறப் பூவைக் கொடுத்தார்.

மறு நாள் கிட்டு சிவப்பு நிறப் பூவோடு ஜமீன்தாரர் வீட்டிற்குப் போனான். அதைக் கண்டதும் திவான் அவனுக்கு பனிரெண்டு சவுக்கடிகள் கொடுத்து அனுப்பினார். நீல நிறப் பூ கொண்டு சென்ற ராமநாதனுக்கு நூறு பொற் காசுகள் கிடைத்தன. படிப்பில்லாத ராமநாதன் ஜமீன்தாரரிடம் தன் ஓவியங்களைக் காட்டிப் பேசிய போது மரியாதை இல்லாமல் பேசினானாம். அதற்காகவே அவர் சிவப்பு நிறப் பூ கொடுத்து தண்டனை கொடுக்க ஏற்பாடு செய்திருந்தாராம்.






# பதுக்கிய பணம்

**மா**ணிக்கம் என்ற பணக்காரனுக்கு எவ்வளவு பணம் சம்பாதித்தும் திருப்தியே ஏற்படவில்லை. மேலும் மேலும் பணம் சம்பாதிக்கவே ஆசைப் பட்டான். எனவே ஒரு நாள் பழனி என்ற பதினைந்து வயதுப் பையனை அழைத்து ''அடே, என்னோடு இரு. நீ நான் சொல்லும் வழியில் நடந்து சாமான்கள் கொண்டு வந்தால் அதில் பாதியை உனக்குக் கொடுக்கிறேன்'' என்றான்.

பழனியும் அதற்கு சம்மதித்து மாணிக்கத்தோடு இருந்தான். அன்றிரவு மாணிக்கம் திடீரென ''திருடன்! திருடன்! ஓடி வாருங்கள்'' என்று பலமாகக் கத்தினான். அது கேட்டு அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களெல்லாம் தம் வீட்டு வாசல் கதவுகளைத் திறந்து கொண்டு ஓடி வந்தார்கள்.

இதற்குள் மாணிக்கம் தன் வீட்டுக் கொல்லைப் புறக் கதவைத் திறந்து வைத்து விட்டான். எல்லோரும் வந்து "எங்கே திருடன்?" என்று கேட்டதும் அவன் கொல்லைப் புற வழியாக ஓடியதாக பதில் சொன்னான். அவர்களும் பின் பக்கம் போய்த் தேடிப் பார்த்து விட்டு ''பயல் தப்பி ஓடி விட்டான். இனி வர மாட்டான்'' எனக் கூறி விட்டுத் தம் வீடுகளுக்குச் சென்றனர்.

இந்த சந்தடி சாக்கில் பழனி மற்ற திறந்த வீடுகளில் நுழைந்து அகப்பட்ட விலையுயர்ந்த பொருள்களையெல்லாம் சுருட்டி எடுத்து மூட்டை கட்டிக் கொண்டு யார் கண்ணிலும் படாமல் மாணிக்கத்தின் வீட்டிற்கு வந்து விட்டான்.

எல்லோரும் போன பிறகே மாணிக்கம் அந்த மூட்டையை

நெல்லை காந்திமதி

அவிழ்த்துப் பார்த்தான். அதில் பல வித பாத்திரங்களும், பொருள் களும் இருந்தன. அப்போது மாணிக்கம் பழனியிடம் ''நீ இதை எடுத்து வந்ததை யாரும் பார்க்கவில்லையே'' என்று கேட்டான். பழனியும் ''யாரும் பார்க்கவில்லை. எல்லோரும் இங்கே இருந்ததால் சாமர்த்திய மாக எடுத்து வந்தேன். சரி, என் பங்கைக் கொடு'' என்று மாணிக் கத்திடம் கேட்டான்.

மாணிக்கமும் ''இப்போது இவற்றைக் கொடுத்தால் நீ எங்கே வைத்துக் கொள்வாய்? நாலைந்து நாட்களுக்குப் பிறகு வாங்கிக் கொள். அதற்குள் இந்தத் திருட்டு பற்றிய பேச்சும் அடங்கி விடும்'' என்றான். பிறகு அவற்றைத் தன் வீட்டின் பாதாள அறைக்குள் அவன் பதுக்கி வைத்தான். அவன் பழனியின் கைச் செலவுக்காக இரண்டு ரூபாய்கள் கொடுத்தான்.

மறு நாளும் மாணிக்கம் 'திருடன்' 'திருடன்' எனக் கத்தி எல்லோரையும் வரவழைத்தான். ஊரார் அவன் வீட்டிற்கு வந்த போது மாணிக்கம் கண்களை இறுக மூடிக் கொண்டு படுத்தவாறே 'திருடன்' 'திருடன்' என மிகவும் பலமாகக் கத்தினான். அது கண்டு ஊரார் ''ஐயோ. பாவம் மாணிக்கம் பயந்து விட்டான். தூக்கத்தில் பிதற்றுகிறான்'' எனக் கூறி அவனை எழுப்பினார்கள். அவனுக்கு தைரிய மூட்டி விட்டு சற்று நேரத்திற்குப் பிறகு அவர்கள் தம் வீட்டிற்குச் சென்று விட்டார்கள். இதற்குள் பழனி முந்தைய தினம் செய்தது போலவே ஊரில் பல வீடுகளில் புகுந்து பல பொருள்களை எடுத்து வந்து விட்டான். எல்லோரும் போன பின் மாணிக்கத்திடம் பழனி தான் கொண்டு வந்த வற்றை கொடுத்தான்.

மாணிக்கம் அவற்றையும் தன் பாதாள அறைக்குள் வைத்து விட்டு ''இவற்றை எல்லாம் நாளை

எடுத்துப் போய் பட்டணத்தில் விற்றுப் பணமாக்கி உன் பங்கு பணத்தைக் கொடுக்கிறேன்'' என்முன். பழனியும் அரை மன துடன் அதற்குச் சம்மதித்தான்.

மறு நாள் மாணிக்கம் பழனி திருடி வந்த பொருள்களை நகருக்கு எடுத்துப் போய் விற்றுப் பணமாக்கிக் கொண்டு வந்தான். பழனியும் அவனிடம் தன் பங்குப் பணத்தைக் கொடுக்கும்படி கேட் டான். மாணிக்கமோ திடீரென ''யாரடா நீ? பணமா? ஏது? ஒன் றும் கொடுக்க முடியாது. உன்னால் ஆனதைச் செய்து கொள்'' என்று கூறி விரட்டி விட்டான்.

பழனியும் வெளியே போவது போல நடித்து மறுபடியும் வந்து மாணிக்கம் பணத்தை பூஜை அறையில் விக்கிரகத்திற்குக் கீழே பாதாள அறையில் வைப்பதைப் பார்த்தான். அதனை எப்படி யாவது அடைந்து விடுவது எனத் தீர்மானித்துக் கொண்டான்.

அன்றிரவு ஒரு மரத்தடியே பழனி படுத்துக் கொண்டான். அப்போது இரண்டு திருடர்கள் வரவே பழனி அவர்களிடம் மாணிக்கம் தனக்குச் செய்த மோசத்தை கூறி ''நீங்கள் அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு எனக்கும் கொஞ்சம் கொடுங்கள்'' என்முன்.

திருடர்களும் மாணிக்கத்தின் வீட்டினுள் போய் அவனைப் பிடித் துக் கட்டிப் போட்டு விட்டு பணத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள். அவர்கள் பழனிக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து விட்டே போனார்கள்.

மாணிக்கம் அன்றிரவு 'திரு டன்' 'திருடன்' எனக் கத்தியும் யாரும் வரவில்லை. முதல் நாள் தூக்கத்தில் அவன் பிதற்றியது போல அன்றும் பிதற்றுகிறுன் என்று ஊரார் எண்ணிப் பேசாமல் இருந்து விட்டனர்.



# என் மீது இடி விழாது!

ரத்தினகிரியை ஆண்ட ரத்தினசேனன் ஒரு பெரிய விருந்து அளித்தான். அப்போது பொழுதைப் போக்க தன் பக்கத்திலேயே தன் விதூஷகனையும் சாப்பிட உட்கார வைத்துக் கொண்டான்.

லட்டு பறிமாறப் பட்டது. பறிமாறியவன் விதூஷகன் இலையில் லட்டைப் போட மறந்து விட்டான். தனக்கு லட்டு இல்லாது போவது கண்டு விதூஷகன் அரசனிடம் ''அரசே, திடீரென இடி இடித்து உங்கள் எல்லோர் தலை மீதும் விழுந்தால் என்ன செய்வீர்களாம்?'' என்று கேட்டான்.

அரசன் சிரித்தவாறே ''எல்லோர் தலையிலும் விழும் இடி உன் மீது மட்டும் விழாதா?'' என்று கேட்டான். அதற்கு விதூஷகன் ''விழாது. நானே அலாதிப் பிறவி. பாருங்களேன். உங்கள் எல்லோர் இலையில் லட்டு விழுந்தது. என் இலையில் மட்டும் விழ வில்லையே'' என்றான்.

அரசன் சிரித்தவாறே விதூஷகனுக்கு லட்டு கொண்டு வந்து போடும்படிக் கூறினான்.





# நேர்மைக்கே பரிசு

**பா**ஸ்கரன் என்ற வாலிபன் எல்லா சாஸ்திரங்களேயும் கற்று தர்பாரில் வேலே பெற தலே நகரான தர்மபுரத்தை அடைந்தான். ஆனுல் தர்பாருக்குள் நுழைய முடியவில்லே. அதற்கு சிபார்சுதான் தேவையென்றும் படிப்போ தகுதியோ இருப்பது பற்றி யாரும் கவலேப்படுவது இல்லே என்றும் தெரிந்து கொண்டான்.

தான் ஒரு பதவியை அடைவதற்கு யார் யார் முட்டுக் கட்டை போடுகிருர்கள் என்றும் அவர்கள் தன்னே விட எவ்விதத்திலும் மேலான திறமையோ தகுதியோ பெற்றவர்களே அல்ல என்பதையும் எப்படி பிறருக்கு எடுத்துக் காட்டுவது என யோசிக்கலாஞன். ஒரு வழியும் தெரியாததால் அவன் திரும்பி தன் குருவிடம் போய் அதற்கு வழி கேட்டான்.

குருவும் ''நீ நேர்மையாக நல்ல வழியில் முயன்று பார்'' என்ருர். பாஸ்கரஞே ''அதஞல் பயனில்லே. இனி மேல் அநியாய வழியில் போஞல்தான் பணம் சம்பாதிக்க முடியும் என்ற தீர்மானத்திற்கு வந்து விட்டேன்'' என்ருன்.

குருவும் ''இத்தகைய கல்வியை நான் உனக்கு அளிக்கவில்லே. எனவே நான் எதுவும் கூற மாட்டேன். நீ என்ன வேண்டுமாஞலும் செய்து கொள்'' எனக் கூறி அனுப்பி விட்டார். பாஸ்கரனும் மனிதன் நல்லவஞவதும் கெட்டவஞவதும் சூழ்நிலேயைப் பொறுத்ததே என எண்ணிக் கொண்டு அங்கிருந்து கிளம்பி தர்மபுரத்திற்கே வந்து சேர்ந்தான்.

பாபநாசம் சாமா

அங்கு ஒரு வீட்டில் திருட இரவில் கொல்லைப் புறத்திற்கு அவன் சென்றான். அங்கிருந்து தெரிந்த ஒரு அறையில் விளக்கு எரியவே அந்த அறைக்குப் பக்கம் சென்றான். அங்கு இருவர் பேசியது அவன் காதில் விழுந்தது.

அப்படிப் பேசியது அந்த வீட்டுக்காரனும் அவனது மனைவியும். வீட்டு எஜமானன் "எல்லா பாக்கியும் வசூலாகி விட்டது. மொத்தம் பத்தாயிரம் இருக்கிறது. நம் மகளின் கல்யாணத்தை எவ்விதத் தடையும் இல்லாமல் நடத்தி விடலாம்'' என்றான். பிறகு அவன் பணப்பையை அங்கே பெட்டியில் வைப்பதை பாஸ்கரன் பார்த்தான்.

கல்யாணத்திற்காக வைத்திருக்கும் பணத்தைத் தான் திருடுவது பாவம் என்று எண்ணி அவன் அங்கிருந்து திரும்பலானான். அப்போது மற்றொருவன் அந்த வீட்டிற்குப் பதுங்கிப் பதுங்கி வருவதைப் பார்த்தான். அவன் என்ன செய்யப் போகிறான் என பாஸ்கரன் பார்க்கலானான்.

வந்த மனிதன் அந்த வீட்டில் விளக்கு அணையும் வரை காத்திருந்தான். விளக்கு அணைந்ததும் வீட்டில் கன்னம் வைத்து உள்ளே போனான். வீட்டிலிருந்த பணப்பையை எடுத்துக் கொண்டு அவன் அந்தக் கன்னம் வைத்த வழியே வெளியே வரலானான். இதற்குள் பாஸ்கரன் அங்கு போய் அந்தத்



திருடனைப் பிடித்துக் கொண்டு உரத்த குரலில் ''திருடன் திருடன்'' என்று கத்தினான். உடனே அந்த வீட்டில் இருந்தவர்கள் விழித்துக் கொண்டு ஓடி வந்தார்கள். அக்கம் பக்கத்தவர்களும் வந்தார்கள். திருடன் அரசாங்க வீரர்களிடம் ஒப்படைக்கப் பட்டான்.

திருடனை அரசன் விசாரித்த போது பாஸ்கரன் சாட்சியாக வர வழைக்கப் பட்டான். அப்போது பாஸ்கரன்தான் யாரென்றும், சகல சாஸ்திரங்களைக் கற்றும் தர்பாரில் உத்தியோகம் கிடைக்காமல் இருப்பதையும் அதனால் மனம் ஒடிந்து போய் நேர் வழியை விட்டுப் போகத் துணிந்ததையும் கூறினான். அன்று அந்த வீட்டில் திருட வந்த போது வீட்டுக்காரனும் அவன் மனைவியும் பேசியதைக் கேட்டு திருடாமல் திரும்பியதையும் அப்போது தான் வேறொருவன் திருட வந்தது கண்டு அவனைப் பிடித்ததையும் விவரமாகக் கூறினான்.

அரசன் பாஸ்கரனைப் பாராட்டி ''நீ நல்ல காரியத்திற்காக வைத்துள்ள பணத்தைத் திருடுவது தப்பு என எண்ணினாய். அது உன் உயரிய பண்பையே காட்டுகிறது. தீயவழியில் பொருள் சேர்ப்பவர்களை தண்டிக்க நான் இருக்கிறேன். நீ நல்ல வழியிலேயே இரு'' எனக் கூறி அவனுக்குத் தன் தர்பாரில் உயர் பதவியை அளித்தான்.

பாஸ்கரனும் தன் குருவிடம் போய் ''குருவே. நேர்வழியில் சென்றால் நிச்சயம் பலன் உண்டு. நான் திருடப் போய் நேர்மையாக நடந்ததால் எனக்கு நல்ல பதவி கிடைத்தது. எல்லாம் நீங்கள் நல்ல வழியில் செல்ல எனக்குச் சொல்லிக் கொடுத்த படிப்பினாலேயே தான். உங்கள் புத்திமதிப் படியே நேர் வழியிலேயே இனியும் செல்வேன்'' எனக் கூறி வணங்கி அவரது ஆசிகளையும் பெற்றான்.



# பத்திரமான இடம்

ஒரு மகா வித்வான் கிருஷ்ண தேவராயரின் தர்பாருக்குப் போய் தன் புலமையை வெளிப் படுத்தி ஆயிரம் வராகன்கள் பரிசு பெற்ருர். அவர் அன்றிரவு ஒரு சத்திரத்தில் படுத்துக் கொண்டார்.

அவர் பக்கத்திலேயே இன்னெருவன் வந்து படுத்துக் கொண்டான். அவன் அந்த மகா வித்வானிடம் பணம் இருப்பது தெரிந்து அதைத் திருடவே வந்தான்.

நள்ளிரவாயிற்று. அவன் எல்லோரும் தூங்கி விட்டார்கள் எனப் பார்த்து மகா வித்வானின் தலைக்கு அடியே வைக்கப் பட்டிருந்த மூட்டையை மெதுவாக உருவி விட்டான். ஆனல் அதைத் தடவிப் பார்த்தான். அதில் பணம் இருக்கவில்லை.

அவர் அந்தப் பணத்தை எங்கே வைத்து விட்டார் என்று பார்க்க அத்திருடன் விடியும் வரை காத்திருந்தான். விடிந்த போது மகா வித்வான் தன்னருகே படுக்கை போட்டிருந்த திருடனின் தலையணைக்கு அடியிலிருந்து தன் மூட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பினர்.

அதைப் பார்த்த திருடன் சிலையாக நின்ருன்.






# நேர்மை நிலைக்கும்

உலகில் தர்மதேவதை நல்லவர்களை எப்படிக் காக்கிறது என்று பார்க்க பார்வதிதேவி ஒரு முறை விரும்பினாள். சிவபிரானும் அவளை ஜெயபுரத்திற்குப் அனுப்பினார்.

ஜெயபுரத்தை அப்போது ஜெயசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது தர்பாரில் தர்மசேனன் என்ற உயர் அதிகாரி இருந்தான். அவன் நேர்மை மிக்கவன். அப்பழுக்கு இல்லாதவன் இக்காரணத்தால் லஞ்சம் வாங்கும் பல உத்தியோகஸ்தர்கள் தர்மசேனனைப் பதவியிலிருந்து விரட்ட திட்டம் போட்டார்கள். இந்த சூழ்ச்சிக் காரர்களின் தலைவன் வக்கிரசிம்மன்.

அவன் ஆயிரம் வராகன்களை எடுத்து ஒரு பாத்திரத்தில் போட்டு அப்பாத்திரத்தை தர்மசேனனின் வீட்டுக் கொல்லைப்புறத்தில் யாருக்கும் தெரியாமல் புதைத்து வைத்தான்.

அதற்குப் பிறகு அவன் ராமவர்மன் என்பவன் எழுதியது போல தர்மசேனன் லஞ்சம் வாங்கி பணத்தைத் தன் வீட்டுக் கொல்லைப் புறத்தில் புதைத்து வைத்திருப்பதாக அரசனுக்குக் கடிதம் எழுதிப் போட்டான்.

கடிதத்தைப் படித்த அரசன் தன் வீரர்களோடு தர்மசேனனின் வீட்டைச் சோதனை போட்டான் அக்கடிதத்தில் குறிப்பிட்ட இடத்தைத் தோண்டிப் பார்த்தான். அங்கு பாத்திரம் கிடைத்தது. ஆனால் அதில் பணம் இருக்கவில்லை. கூழாங்கற்களே இருந்தன.

அதற்குக் காரணம் வக்கிரசிம்மன் அதை அங்கு புதைத்து வைத்ததை ஒரு திருடன் பார்த்ததே. அவன் வக்கிரசேனன் போனதுமே

திருச்சி தங்கசாமி

குழி தோண்டி அப்பாத்திரத்திலுள்ள பணத்தை எடுத்துக் கொண்டு கூழாங்கற்களைப் போட்டு முன் போல வைத்து மண்ணைப் போட்டு மூடி விட்டுப் போய் விட்டான்

தன் யுக்தி பலிக்காது போனது கண்ட வக்கிரசிம்மன் தன் ஆட்களை தருமசேனனின் வீட்டிற்கு ஒரு நாள் இரவு அனுப்பினான். அந்த இரண்டு பேர்களும் நிறைய நகைகள் அணிந்த ஸ்திரீ ஒருத்தியோடு சென்றனர்.

அவர்கள் தர்மசேனனிடம் ''ஐயா, நாங்கள் வெளியூர் வாசிகள். எங்களிடம் பணமும் நகையும் ஏராளமாக உள்ளன. இவற்றை நீங்கள் பத்திரமாக வைத்திருந்து நாளை கொடுங்கள்'' என்றனர். தர்மசேனனும் அவர்கள் கொடுத்த பணத்தையும் நகைகளையும் வாங்கி வைத்தான்.

மறு நாள் அரசனுக்கு ராமவர்மன் என்பவன் எழுதிய ஒரு கடிதம் கிடைத்தது. அதில் தர்மசேனன் மீண்டும் லஞ்சம் வாங்கியதாயும் பணமும் நகையும் அவன் வீட்டில் ஏராளமாக இருப்பதாயும் எழுதப் பட்டிருந்தது. அரசன் அக்கடிதத்தோடு தர்மசேனன் வீட்டிற்குப் போய் சோதனை போட்டுப் பார்த்தான். கடிதத்தில் எழுதி இருந்தபடி நிறையப் பணமோ நகைகளோ அங்கு இருக்கவில்லை.

தர்மசேனன் அரசன் காட்டிய கடிதத்தைப் பார்த்து விட்டு



''அரசே, இக்கடிதத்தின் ஒரு பகுதியில் உண்மை உள்ளது. ஒரு நாள் இருட்டிய போது இருவர் ஒரு ஸ்திரீயோடு வந்தனர். என்னிடம் நிறையப் பணமும் நகைகளும் கொடுத்து பத்திரமாக வைத்திருக்கும்படி சொன்னார்கள். ஆனால் சற்று நேரத்திற்குப் பிறகு முன் வந்தவர்களில் ஒருவனும் அந்த ஸ்திரீயும் வந்து ''நாங்கள் இப்போதே ஊருக்குக் கிளப்புகிறோம். எம் பணத்தையும் நகைகளையும் கொடுங்கள், என்று சொல்லி அவற்றை வாங்கிக் கொண்டு போய் விட்டார்கள்'' என்றான்.

இதே சமயம் சில வீரர்கள் ஒருவனையும் பெண்ணை ஒருத்தியையும் இழுத்து வந்து அரசன் முன் நிறுத்தினார்கள். ஒரு வீரன் ''இவர்கள் ஏராளமான பணத்துடனும் நகைகளுடனும் சந்தேகப்படத்தக்க விதத்தில் திரிந்து கொண்டிந்தார்கள். இவர்கள் வக்கிரசிம்மனின் கையாட்கள். இவர்கள் தாம் முதலில் இங்கு வந்து பணத்தையும் நகைகளையும் கொடுத்தவர்களாம். இவற்றைக் கொடுத்து வக்கிரசிம்மன் தர்மசேனனை மாட்டி வைக்கத் திட்டம் போட்டானும். ஆனால் அவன் கொடுத்த நகைகளைத் திருடிப் போக இவர்கள் தந்திரம் செய்து மறுபடியும் இந்த இருவர் மட்டும் வந்து தர்மசேனரிடமிருந்து இவற்றை வாங்கிக் கொண்டு போனார்களாம். இந்த விவரம் எல்லாம் இவர்களை அதட்டி மிரட்டி அடித்ததில் தெரிந்தது'' என்றான்.

அரசன் உடனே வக்கிரசிம்மனைக் கைது செய்யச் சொன்னான். அவனுக்கும் அவனது சகாக்களுக்கும் தண்டனை விதித்தான். தர்மசேனன் பதவி உயர்வு பெற்றான்.

இதையெல்லாம் கண்ட பார்வதிதேவி தர்மதேவதையின் செயல்களைப் பாராட்டியவாறே கைலாசத்திற்குச் சென்றாள்.






துயரக் கடலில் மூழ்கிய இராமர் விபீஷணன் என்ன சொன்னான் என்பதைச் சரியாகக் கேட்க வில்லை. ஒரு சில நிமிடங்களுக்குப் பிறகு அவர் தம்மைத் தாமே தேற்றிக் கொண்டு ''விபீஷணா, நீ என்னமோ சொன்னாயே அதை மறுபடியும் கூறு'' என்றார்.

விபீஷணனும் ''இலட்சுமணன் நிகும்பலைக்குப் போய் இந்திர ஜித்து செய்யும் யாகத்தை முடிவு பெறாமல் செய்யட்டும். இந்திர ஜித்தும் அவ்வாறு யாகத்தைக் கலைத்தவன் கையால்தான் இறப் பான். இந்திரஜித்து இறந்து விட் டால் இராவணனின் சப்த நாடி களும் ஒடுங்கிப் போய் விடும்'' என்று மறுபடியும் சொன்னான். இராமரும் விபீஷணன் கூறிய படியே இந்திரஜித்தைக் கொன்று விடும்படி இலட்சுமணனிடம் கூறி னார். இலட்சுமணன் வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண் டான். கவசம் தரித்துக் கொண் டான். விபீஷணனும் போர்க் கோலத்தோடு சென்றான். நிகும் பலையைக் காக்க ராட்சஸப் படை வியூகம் அமைத்து நின்று கொண்டி ருப்பதை அவர்கள் கண்டார்கள்.

விபீஷணனும் இலட்சுமண னிடம் ''இந்த யாகம் முடிவதற் குள் வானரப் படை ராட்சஸப் படையைத் தாக்கி அழிக்க வேண் டும். இவர்களைக் கடந்து சென்



ருலே இந்திரஜித்தைப் பார்க்க முடியும். அப்போது அவனை நீங்கள் கொல்லலாம்'' என்ருன்.

இலட்சுமணனும் இராட்சஸப் படையைத் தாக்குமாறு வானரர்களுக்கு உத்திரவு கொடுக்கவே வானரப் படை அரக்கர் படையைத் தாக்கலாயிற்று. தனது படை அழிவது கண்டு இந்திரஜித்து தான் மேற்கொண்ட யாகத்தை முடிக்காமலேயே எழுந்து வானரப் படையை எதிர்க்கத் தன் தேரில் அமர்ந்து வந்தான்.

இதற்குள் விபீஷணனும் இலட்சுமணனை ஒரு பெரிய வனத்தருகே அழைத்துப் போய் அங்கே பயங்கரமாக அடர்ந்துள்ள ஒரு மரத்தைக் காட்டினுன். அந்த மரத்தடியேதான் இந்திரஜித்து பலிகளைச் செய்து விட்டு போருக்குக் கிளம்புவான். அதற்குப் பிறகே அவனுல் மாயப் போர் புரிய முடியும்.

இதைக் கேட்ட இலட்சுமணன் இந்திரஜித்தின் வருகைக்காக அந்த மரத்தினடியே காத்து நின்ருன். அப்போது இந்திரஜித்தும் தன் தேரில் அமர்ந்தவாறே அந்த மரத்தடியே வரலானுன்.

அப்போது இலட்சுமணன் ''அடே இந்திரஜித்தா! உன்னை நான் போருக்கு அழைக்கிறேன். சுத்த வீரனுனுல் என்னோடு நேருக்கு நேர் நின்று போர் புரிபார்க்கலாம்'' என்று சவால் விட்டான்.

இலட்சுமணன் கூறியது கேட்டு இந்திரஜித்து சுற்றிலும் ஒரு முறை பார்த்தான். இலட்சுமணனோடு விபீஷணன் நிற்பதை அவன் கண்டான். அது கண்டு அவனுக்கு ஆத்திரமே ஏற்பட்டது. அவன் கோபத்தோடு விபீஷணனைப் பார்த்து ''விபீஷணு! நீ இராட்சஸ குலத்தில் பிறந்தும் கூட அக்குலத்தின் மீது கொஞ்சமும் பற்றுதல் இல்லாமல் இருக்கிருய். அவர்களை அழிக்கவும் முயல்கிருய். யாகத்தை முடிவடையாமல்

செய்து என்னை அழிக்கத் திட்ட மிட்டு விட்டாயே. இப்படிப் பட்ட துரோகச் செயலை வேறு யாராவது செய்திருக்கிறானா அல் லது செய்யத்தான் துணிவானா?'' என்று கேட்டான்.

அது கேட்டு விபீஷணன் ''இந் திரஜித்தா! என் குணம் உனக்குத் தெரியாதது அல்ல. அநீதியையும் அநியாயத்தையும் நான் சகித்துக் கொண்டு இருக்க மாட்டேன். நான் என் அண்ணனை விட்டு வந்ததே நீதிக்காகப் போராடத் தானே. உன் தந்தையான இராவணனிடம் எல்லா விதமான குறைகளும் உள்ளன. வெகு விரைவிலேயே உன் தந்தையும் இலங்கையில் உள்ள எல்லா அரக் கர்களும் அழியப் போகிறார்கள். நீயும் இன்னும் கொஞ்ச நேரத் தில் இறக்கப் போகிறாய். எனவே என்னைப் பற்றி என்னவெல்லாம் சொல்ல வேண்டும் என்று நினைக் கிறாயோ சொல்லி விடு. உன்னை நான் கடிந்து கொள்வதால் என்ன பயன்? நீ செய்த செயல்களை நினைத்துப் பார். மாய சீதையைக் கொண்டு வந்து போர்க் களத்தில் வெட்டி இராமரையும் இலட்சு மணனையும் ஏமாற்றினாயே. இது எந்த தர்மத்தில் சேர்ந்தது? அநியாயத்திற்கு அணை போடா மல் ஆதரவு கொடுத்து போர் புரிய வந்திருக்கிறாயே. இது சரியா? உனக்கு அழிவு காலம் வந்து விட்டது. அதனால்தான்





இப்படியெல்லாம் செய்கிறாய். சரி. யமலோகத்திற்குப் போ. அவ்வளவுதான் உனக்கும் கொடுத்து வைத்துள்ள பாக்கியம்'' என்றான்.

அப்போது இந்திரஜித்து ''அடே இலட்சுமணா! உன்னை அடித்து நினைவு இழக்கச் செய்தேனே. அதனை நீ மறந்து விட்டாயா? இப்போது மறுபடியும் என்னோடு போர் புரிய வந்திருக்கிறாயே. இது நீயே சாவை வரவழைத்துக் கொள்வது போலத்தான்'' என்றான்.

இலட்சுமணனும் ''நீ என் கண்ணில் படாமல் மறைந்திருந்து திருடனைப் போல என்னைத் தாக்கினாய். அப்படிச் செய்வதில் என்ன சூரத்தனம் இருக்கிறது? என்னோடு நேருக்கு நேராக நின்று போர் புரி பார்க்கலாம். அப்போது உன் வண்டவாளம் தெரிந்து போய் விடும்'' என்றான்.

இந்திரஜித்தும் ''ஆகா, அப்படியே செய்கிறேன்'' எனக் கூறி அம்புகளை தொடர்ந்து எய்யலானான். அவை இலட்சுமணனின் உடலில் குத்தி காயமாக்கின. இலட்சுமணனும் சளைக்காமல் அம்புகளை எய்து இந்திரஜித்தின் உடலில் பல காயங்களை ஏற்படுத்தி இரத்தம் வழிந்தோடச் செய்தான்!

கொஞ்ச நேரத்தில் இந்திரஜித்தின் முகத்தில் பயத்தின் சாயை படர்ந்து கொண்டு போவதை விபீஷணன் கண்டான். அவன் இலட்சுமணனிடம் ''இந்திரஜித்தின் மனதில் பயம் தோன்றி விட்டது. இப்போதுதான் அவனை அடித்து வீழ்த்துவதற்குத் தக்க தருணம் கிடைத்துள்ளது'' எனக் கூறினான். இலட்சுமணனும் தன் தாக்குதலை மேலும் தீவிரமாக்கி இந்திரஜித்தை அடித்து அவன் தன் நினைவை இழந்து விழுமாறு செய்தான்.

இந்திரஜித்தின் கவசம் தூள் தூளாகியது. தன் நினைவிற்கு வந்து இந்திரஜித்து கோபம்



கொண்டு இலட்சுமணனைக் கடுமையாகத் தாக்கி அவனது கவசத்தையும் பிளந்து விட்டான். இவ்விதமாக இருவரும் ஒருவருக்கு மற்றவர் சளைக்காமல் போர் புரியலாயினர்.

அப்போது விபீஷணன் வானர வீரர்களைப் பார்த்து ''இலட்சுமணனும் இந்திரஜித்தும் கடும் போர் புரிவதையும் பார்க்கிறீர்களே. நீங்கள் இந்திரஜித்தைக் கடுமையாகத் தாக்கி அவனது அழிவிற்கு அடிகோலுங்கள்'' என்று கூறினான்.

இதைக் கேட்டு உற்சாகம் அடைந்து வானரர்கள் ஆர்ப்பாட்டம் செய்து அரக்கர் படையை அழிக்கலானார்கள். விபீஷணனும் மற்ற வானர வீரர்களுமாக இந்திரஜித்தின் படையில் பெரும் பகுதியை அழித்து விட்டார்கள்.

இலட்சுமணன் தன் அம்பு ஒன்றால் இந்திரஜித்தின் தேரோட்டியின் தலையைத் துண்டித்து வீழ்த்தினான். அது கண்டு இந்திரஜித்து தன் தேரை தானே ஓட்டிக் கொண்டு போர் புரியலானான். இந்திரஜித்தை மேலும் களைத்துப் போகச் செய்ய அதுவே தக்க தருணம் என இலட்சுமணன் நினைத்து தன் தாக்குதலைத் தீவிரப் படுத்தினான். தேர்ப்பாகனை இழந்த இந்திரஜித்தின் கர்வம் பாதியாகிப் போய் விட்டது. அவனது முகம் வாடி விட்டது.

அதனைக் கண்ட வானரர்களின் உற்சாகம் சொல்லி முடியாது. உடனே அவர்கள் இந்திரஜித்தின் தேரை இழுத்த குதிரைகளைத் தாக்கி அவை இறந்து விழச் செய்தார்கள். அது கண்டு இந்திரஜித்து தேரிலிருந்து இறங்கி தரை மீது நின்று வானரர்களுடன் போர் புரியலானான்.

அப்போது அவனுக்குப் பாதுகாப்பாக அவனைச் சுற்றிலும் ராட்சஸர்கள் நின்று கொண்டு போர் புரியலானார்கள். இந்திரஜித்தும் ''நீங்கள் போர் புரிந்து கொண்டே இருங்கள். நான் தப்பிப் போய்

இன்னொரு தேரில் அமர்ந்து போர் புரிய வருகிறேன்'' எனக் கூறி விட்டு போர்க்களத்திலிருந்து எதிரிகளின் கண்களில் படாமல் இலங்கைக்குள் சென்றான்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவன் அழகிய தேரில் அமர்ந்து போர்க்களத்திற்குத் திரும்பி வந்து விட்டான். திடீரென மற்றொரு தேரில் அமர்ந்து இந்திர ஜித்து வந்தது கண்டு இலட்சு மணனும் விபீஷணனும் ஆச்சரியப் பட்டார்கள்.

இந்திரஜித்தோ தன் தாக்குதலை தீவிரமாக்கி வானரப் படையை அழிக்கலானான். அது கண்டு இலட்சுமணன் இந்திரஜித்தின் கையிலிருந்த வில்லை ஒடித்தான். மறுபடியும் அவனது தேர்ப் பாகனின் தலையை துண்டித்தான். விபீஷணன் அவனது தேரின் குதிரைகளை அடித்து இறந்து போகும்படிச் செய்தான்.

அப்போது இந்திரஜித்து இலட்சு மணனுடன் நேருக்குநேர் நின்று போர் புரியலானான். இருவரும் பல அஸ்திரங்களை விட்டு சளைக் காமல் போர் புரிந்தனர். முடிவில் இலட்சுமணன் இந்திராஸ் திரத்தை எய்து இந்திரஜித்தின் தலையைத் துண்டித்து தனியே போகும்படி வீழ்த்தினான். இந்திரஜித்து இறந்தது கண்டு



வானரப் படை வெற்றி கோஷம் முழக்கியது. அரக்கர் படையோ பயந்து ஓடலாயிற்று. இலட்சு மணன் இராமரருகே போய் நின்று இந்திரஜித்து இறந்ததைக் கூறி னான். இராமரும் இலட்சுமணனைக் கட்டித் தழுவிக் கொண்டார். பின்னர் அவனது உடலில் ஏற் பட்ட காயங்களுக்கு மருந்து போடுமாறு சுஷேனனிடம் கூறினார்.

போர்க்களத்திலிருந்து ஓடிய ராட்சஸ வீரர்களில் சிலர் இராவ ணனிடம் போய் இந்திரஜித்து இறந்ததைக் கூறினார்கள். அது கேட்டு இராவணன் ஆவென அல றியவாறே தன் நினைவை இழந்து

விழுந்தான். மயக்கம் தெளிந்து எழுந்த இராவணன் இந்திரஜித்து இறந்ததற்காகக் கண்ணீர் வடித்துக் கவலைப் பட்டான். அந்தத் துயரம் மெதுவாக கோபமாக மாறியது. அவன் இராமரைப் பழி வாங்க சீதையையே கொல்வது எனத் தீர்மானித்து அசோக வனத்தை நோக்கிக் கிளம்பலானான்.

அவன் தன்னைச் சுற்றி நின்ற வானரர்களிடம் ''என் மகன் இந்திரஜித்து மாய சீதையைத்தான் கொன்றான். நானே உண்மையான சீதையைக் கொன்று விடுகிறேன். இராமனையே எண்ணி உருகிக் கொண்டிருக்கும் அந்த சீதை இருப்பதால் எனக்கு என்ன பயன்?'' என்று கூறி வாளை உருவிக் கொண்டான்.

அதைக் கண்டு மண்டோதரியும் இராவணனின் மந்திரிகளும் இராவணனைத் தடுத்து ''நடந்தது போகட்டும். இப்போதாவது சீதையை விடுதலை செய்து விட்டு அரக்கர்குலம் அழியாமல் இருக்க வழி செய்யுங்கள்'' என்று கூறினார்கள்.

இராவணனின் கோபம் மேலும் அதிகரித்தது. அப்போது மந்திரிகள் ''நீங்கள் சீதையைக் கொன்றால் மட்டும் இராமரின் தாக்குதலிலிருந்து தப்ப முடியுமா? அவரது தாக்குதல் இன்னமும் தீவிரமாகி நம் ஆட்களை அழிவார்கள். எனவே சீதையைக் கொல்லும் யோசனையை விட்டு விட்டு இராமரைக் கொல்ல வழிபாருங்கள்'' என்றனர்.

அது கேட்டு இராவணனும் ''ஆமாம். சீதையைக் கொன்றால் பிரச்னை தீராது. இராமனைக் கொல்ல நான் விசேஷசக்தி பெற வேண்டும். அதற்காக முதலில் ஹோமம் செய்கிறேன்'' எனக் கூறி லங்காஹோமத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யலானான்.






நம்நாட்டின் சுதந்திரப் போரில் பல தியாகிகள் தம் உயிரையே அர்ப் பணம் செய்தனர். அவர்களில் ஒருவர் பாகா ஜதீன். இவர் 1879ல் வங்காளத்தில் ஒரு கிராமத்தில் பிறந்தார்.



பாகா என்ருல் புலி என்று பொருள் ஒரு முறை இவர் தனது ஊர் எல்லையில் கண்ட ஒரு புலியை ஒரு சிறு கத்தியால் குத்திக் கொன்ருர். புலி அவரைத் தன் நகங்களால் கீறி படுகாயப் படுத்தியது. ஆனு லும் அவரது துணிச்சலே அவரைக் காப்பாற்றியது.



அவர் அந்தப் புலியை மட்டுமா துணிவுடன் எதிர்த்தார்? பிரிட்டிஷ் சிங்கத்தையே எதிர்க்க அவர் தீர் மானித்தார். சுவாமி விவேகானந் தர், அரவிந்தர் ஆகியோரின் தேசீய உணர்வு எண்ணங்களால் உந்தப்பட்டு அரசாங்கத்தை எதிர்க்க ஒரு கூட்டத்தை இரகசிய மாக உருவாக்கினுர்.



தேகப் பயிற்சி, சிலம்புச் சுழற்சி, துப்பாக்கி சுடுதல் ஆகியவற்றில் அவர் தம் சகாக்களுக்குப் பயிற்சி அளித்தார். அவர்களும் நாட்டிற் காகத் தம்மையே அர்ப்பணித்துக் கொள்ள முன் வந்தனர், இந்த ரகசியக் கூட்டம் இருப்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் உளவறிந்து அதன் தலைவரான ஜதீனைப் பிடித்து விட்டது.

ஜதீனை சித்திரவதை செய்தார்கள். ஆனால் ஒருவார்த்தை கூட பேச வில்லை. பயமுறுத்திப் பயனில்லை என அதிகாரிகள் கண்டு பதவியும் பணமும் கொடுப்பதாக ஆசை காட்டியும் அவர் தம் ரகசியங் களைக் கூறவில்லை. மிகவும் தொந் தரவு கொடுக்கவே அவர் "பேசா மல் இருக்கிறீர்களா இல்லையா?" என்று மேஜை மீது ஓங்கிக் குத் தினார். மேஜை உடைந்து போயிற்று.





ஜதீன் மீது குற்றம் சாட்ட முடி யாது விட்டு விட்டார்கள். ஜதீன் பயங்கர இயக்கத்தை நடத்த ஆயு தங்கள் சேகரிப்பதற்கு தன் சகா ஒருவனை ஐரோப்பாவிற்கு அனுப் பினார். ஜெர்மனி அவருக்கு உதவுவ தாக வாக்களித்தது. ஜதீன் தன் மூன்று சகாக்களோடு மாறு வேடத் தில் கப்டி என்ற கிராமத்தின் வழியே பால் சோர் என்ற பழங் கால துறைமுகத்திற்குப் போய் இரகசியமாக வரும் ஜெர்மனியக் கப்பலுக்காகக் காத்திருந்தார்.

பாரத சுதந்திரப் போராட்டத்திற்காக ஆயுதங்களை ஏற்றி வந்த ஜெர்மானியக் கப்பலை இரண்டு பிரிட்டிஷ் கப்பல்கள் துரத்தின இதனால் ஜெர்மானியக் கப்பல் தன்னிடமிருந்த ஆயுதங்களையெல்லாம் கடலில் எறிந்து விட்டது. அது கேட்டு ஜதீன் ''இனி நாம் அன்னியர்களை நம்பிப் பயனில்லை'' என்றார்.





ஜதீன் வேறு திட்டம் போடலானார். இதற்குள் கல்கத்தா இரகசியப் போலீசார் அவரது மறைவிடத்தைக் கண்டு பிடித்து விட்டார்கள். ஜதீனையும் அவரது சகாக்களையும் கைது செய்ய அவர்கள் வந்த போது ஒரே மழையாக இருந்தது. ஜதீனும் அவரது சகாக்களும் தப்பி ஓடினார்கள்.

தம்முயற்சி தோற்றது கண்டு போலீசார் பயங்கரக் கொள்ளைக்காரர்கள் தலை மறைவாகி விட்டனர் என்று அவர்களைப் பற்றிக் கூறி அவர்களைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு பரிசு கொடுப்பதாக அறிவித்தனர். ஜதீனும் அவரது சகாக்களுமோ யாருக்கும் அகப்படாமல் புதபலங்க என்ற நதியை அடைந்தார்கள்.





அங்கு அவர்களைப் பார்த்த சிலர் அவர்கள் கொள்ளைக் காரர்கள் என நினைத்துக் கூச்சலிட்டார்கள். ஆனால் ஜதீனும் அவரது சகாக்களும் தம் துப்பாக்கிகளுடனும் துப்பாக்கி குண்டுகளுடனும் தப்பி நதியைக் கடந்து சென்றார்கள்.



அங்கு போலீசாரும் வீரர்களும் அவர்களைப் பிடிக்க வரவே கடும் போராட்டம் நடந்தது. அந்த நால்வரின் உடல்களை போலீசாரின் துப்பாக்கி குண்டுகள் சல்லடையாகத் துளைத்தன. அப்போதும் அவர்கள் சளைக்கவில்லை. கடைசி வரை போராடினார்கள்.



கடைசியில் ஜதீனை போலீசார் பிடித்து விட்டார்கள். ஆனால் அன்றிரவே ஜதீன் இறந்தார். அவர் இறக்குமுன் போலீசாரிடம் "என் சகாக்களை தண்டிக்க வேண்டாம். இதற்கெல்லாம் நான் தானே பொறுப்பு" என்றார். அப்போதைய போலீஸ்கமிஷனர் சர். சார்லஸ் டிகார்ட் "இந்தியர்களில் மாபெரும் வீரரை நான் கண்டேன்" என ஜதீனைப் பாராட்டினர்.

# கதைத் தலைப்புப் போட்டி

## இக்கதைக்கு ஏற்ற நல்ல தலைப்பைக் கொடுத்து ரூ. 25/- பரிசு பெறுங்கள்.

# ?

கீசியாமா என்ற ஜப்பானியன் ஒரு நாள் தன் மனைவியிடம் '' நம் வீட்டுக் கொல்லையில் ஆடு மாடுகளைக் கட்டுவதற்காக நாம் அடித்து வைத்த முளை சற்று உயரமாகி விட்டது. இது ஆபத்தானது. அதனை அடித்துக் கீழே இறக்கலாம். பக்கத்து வீட்டிலிருந்து சுத்தியல் வாங்கி வா '' என்றான்.

அவனது மனைவியும் அடுத்த வீட்டிற்குப் போய் விட்டு வெறுங் கையோடு வந்து '' அடுத்த வீட்டில் சுத்தியல் கேட்டேன். அவர்கள் முளை மூங்கிலால் ஆனதா, மரத்தால் ஆனதா, இரும்பால் ஆனதா என்று கேட்டார்கள். நானும் இரும்பு முளை என்றேன். அப்போது அவர்கள் '' நாங்கள் சுத்தியல் கொடுக்க மாட்டோம் உங்கள் வீட்டு இரும்பு முளையை எங்கள் சுத்தியலால் அடித்தால் எங்கள் சுத்தியல் தான் உடைந்து போய் விடும் என்று சொல்லி விட்டார்கள் '' என்றாள்.

கீசியாமாவும் '' உலகில் எப்படிப்பட்ட கஞ்சப் பயல்கள் இருக்கிறார் கள் பார்த்தாயா? போகட்டும் போ. வேறு வழியில்லை. நம் வீட்டு சுத் தியலையே எடுத்துவா. அந்த முளையை அடித்துக் கீழே இறக்கி விடலாம். வேறு என்ன செய்வது'' என்றான்.

★ ★ ★

மேற்கண்ட கதைக்கு ஒரு தலைப்பை ஒரு தபால் கார்டில் உங்கள் முகவரியுடன் எழுதி, கதைத் தலைப்புப் போட்டி அம்புலிமாமா, 2+3 ஆர்காடு ரோடு, வடபழனி, சென்னை-600026-என்ற முகவரிக்கு அனுப்பவும்.

தபால் கார்டில் இத்தலைப்புகளைத் தவிர வேறு எதுவும் எழுதக் கூடாது. தலைப்புகள் எமக்கு மார்ச் 10ந்-தேதிக்குள் வந்து சேர வேண் டும். இப்போட்டியின் முடிவு மே 77-அம்புலிமாமா இதழில் வெளி யிடப்படும்.

---

ஜனவரி மாதப் போட்டி முடிவு: **தனக்கே தானம்**

பரிசு பெற்றவர்: **க. புவனேஸ்வரி, டி. எஸ். 4609/10 புதுக்கோட்டை.**

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றிப் பெற்ற தலைப்புகள் 1977 மே மாத இதழில் வெளியிடப்படும்**







A. S. Anbukkarasu

A. S. Anbukkarasu

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ மார்ச் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேரவேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## ஜனவரி மாதப் போட்டியின் முடிவு

முதலாவது போட்டோ : **அலைமகள் வளர்த்தது.**

இரண்டாவது போட்டோ : **நிலமகள் கொடுத்தது**

பரிசு பெற்றவர் : **எஸ். பானுமதி.**

*175, தெற்கு வெளி வீதி, மதுரை-1*

பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பிவைக்கப்படும்.

**Statement about ownership of AMBULIMAMA (Tamil)**
**Rule 8 (Form VI), Newspapers (Central) Rules, 1956**

1. *Place of Publication* ... 'CHANDAMAMA BUILDINGS'
2 & 3, Arcot Road
Vadapalani, Madras-600 026

2. *Periodicity of Publication* ... MONTHLY
1st of each calendar month

3. *Printer's Name* ... B. V. REDDI
*Nationality* ... INDIAN
*Address* ... Prasad Process Pvt Limited
2 & 3, Arcot Road, Vadapalani
Madras-600 026

4. *Publisher's Name* ... B. VISWANATHA REDDI
*Nationality* ... INDIAN
*Address* ... Chandamama Publications
2 & 3, Arcot Road, Vadapalani
Madras-600 026

5. *Editor's Name* ... NAGI REDDI
*Nationality* ... INDIAN
*Address* ... 'Chandamama Buildings'
2 & 3, Arcot Road, Vadapalani
Madras-600 026

6. *Name & Address of individuals who own the paper* ... CHANDAMAMA CHILDREN'S TRUST FUND
Beneficieries:

1. B. V. HARISH
2. B. V. NARESH
3. B. V. L. ARATI
4. B. L. NIRUPAMA
5. B. V. SANJAY
6. B. V. SHARATH
7. B. L. SUNANDA
8. B. N. RAJESH
9. B. ARCHANA
10. B. N. V. VISHNU PRASAD
11. B. L. ARADHANA

All Minors—by Trustee:
M. UTTAMA REDDI, 9/3, V.O.C. Street, Madras 600 024

I, B. Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1st *March* 1977

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*

**Chandamama Camel Colour Contest Result No. 6 (Tamil)**

*1st Prize*: D. Hemanth Kumar, Hyderabad-62. *2nd Prize:* T. Nageswari Thiagarajan, Arkonam-631 001. *3rd Prize*: K. Achuta Ram, Vizianagaram-531 202. *4th Prize:* D. Vimala, Vellalore Post. R. Uma, Neyveli-607803. M. Raveendran, Bahoor. P.O. Pin: 601 402. Kandula Vani, Vizianagaram-2. R. Roja, Sivakasi, *5th Prize:* R. Mahalakshmi, Bombay-22. S. Punitha Eswari, Virudhunagar, Giridhar Ranganathan, Secunderabad. K. Chandasekaran, Neluikuppam. V. Narayanamurthy, Madras-600088. M. P. Navarasan, Madras-600 033. Jai Ram Vishakhapatnam-1. N. Krishnan, Trichy-8. K. G. Santha Kalyani, Arkonam. J. Dhanasakar, Madras-600 018

DR. T. MARIAPPAN, M.B.B.S
CIVIL ASSISTANT SURGEON,
PRIMARY HEALTH CENTRE,
VEERAPANDI.



நினைக்கும் நெஞ்சு
இனிக்குமே, மணக்
கோலத்தில் அன்று நீங்கள்
நின்ற நன்னாள் — மணியான மணப்பெண்
என்று மலர்மாரி தூவினார்களே உங்கள் மீது.
இன்றோ, உங்கள் மகளுக்குத் தை பிறந்தாச்சு,
வருகிற வாரம் மேளம் முழங்குமே. நினைவுகள் எல்லாம்
நிலைத்திட வேண்டுமன்றோ? அதற்கொரு ஆல்பம் வேண்டும்
படமெடுக்க ஒரு க்ளிக்-III.

விலை:
ரூ. 70.25,
எக்ஸைஸ் தீர்வை
உள்ளிட்டது.
தல வரிகள்
தனி.




# க்ளிக் III

குறிவைத்துச் சடக்கெனச் சுடும் காமெரா.







விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
மர்ச்சண்ட் சேம்பர்ஸ், 41 நியூ மெரின் லைன்ஸ், பம்பாய்-400 020.
கிளைகள்: பம்பாய் ● நியூ டெல்லி ● கல்கத்தா ● சென்னை.
® புகைப்படச் சாதனத் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட்,
ஆண்ட்வெர்ப் லீவர்குஷன் அவர்களின் ரெஜிஸ்டர்டு டிரேட் மார்க்.

தயாரிப்பாளர்கள்: **நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.,** பரோடா ● பம்பாய்

SIMOES/AG/17C TM

